உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி-௩௮.] விஷு ௵ ஆடி ௴ [பகுதி-௯.

Vol. 38. July — August 1941. No. 9.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. SHANMUGA RAJESWARA NAGANATHA SETHUPATHY AVL., and Published by THIRU. NARAYANA IYENGAR at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,

மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

உ
கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—௩௮.] விஷு ஆடி மீ [பகுதி—௯.
Vol. 38. July — August 1941. No. 9.

## இசைக்கிரமம்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

அலகு, மாத்திரை எனப் பழந்தமிழிசைநூல் குறித்தனவை இக்காலத்தார் சுருதி என்பர். மெலிவுத்தானம், சமன்தானம், வலிவுத்தானம் என்பன மந்தரஸ்தாயி, மத்திமஸ்தாயி, தாரஸ்தாயி என இக்காலத்தில் வழங்கப்படுவ. இசைநரம்பு என்பது தமிழ் வழக்கு; ஸ்வரம் என்பது வடமொழிவழக்கு.

ஒவ்வொரு தானத்திலும் ஏழு இசைநரம்புகள் உள. இளிக் கிரமத்திலே (ஷட்ஜக்கிராமத்திலே) குரல் (ம), துத்தம் (ப), இளி (ச) நன்னான்கு அலகு பெறுவ. கைக்கிளை (த), விளரி (ரி) மும்மூன்று அலகு பெறுவ. தாரம் (க), உழை (நி) இவ்விரண்டு அலகு பெறுவ. ஏழு இசைநரம்பிற்கும் மொத்த அலகு இருபத்திரண்டு.

பழந்தமிழிசைமரபிலே முதலிற்றோன்றியது தாரக்கிரமம் (காந்தாரக்கிராமம்). இக்கிரமத்திலே தாரமும் உழையும் ஒவ்வோர் அலகுபெறுவ. எஞ்சிநின்ற ஐந்தும் தனித்தனி நான்கு அலகு பெறுவ. மொத்த அலகு இருபத்திரண்டு. இதனினின்று மேற் குறித்த இளிக்கிரமம் (ஷட்ஜக்கிராமம்) தோன்றிய முறையினைக் கணிதவாயிலாக ஆராயப்புகுவாம்.

தாரத்து உழை பிறக்கும்; உழையுட் குரல் பிறக்கும்; குரலுள் இளி பிறக்கும்; இளியுள் துத்தம் பிறக்கும்; துத்தத்துள் விளரி பிறக்கும்; விளரியுட் கைக்கிளை பிறக்கும் எனப் பிறப்புமுறை கூறப்பட்டது. இக்காலவழக்குப்பெயர்களாற்கூறின் காந்தாரத்து

நிஷாதம் பிறக்கும்; நிஷாதத்து மத்திமம் பிறக்கும்; மத்திமத்து ஷட்ஜம் பிறக்கும்; ஷட்ஜத்துப் பஞ்சமம் பிறக்கும்; பஞ்சமத்து ரிஷபம் பிறக்கும்; ரிஷபத்துத் தைவதம் பிறக்கும்: என அறிகின்றும். ஸ்வரங்களுக்குரிய குறியீட்டெழுத்துக்களினுலே காட்டுமிடத்து,

க > நி > ம > ச > ப > ரி > த

எனவாகும். ஐந்தாம்நரம்பினைக் கிளைநரம்பு என்பது பழந்தமிழ் வழக்கு; பஞ்சமம் என்பது இக்காலத்து வழக்கு.

காந்தாரத்திற்குப் பஞ்சமம் நிஷாதம்
நிஷாதத்திற்குப் பஞ்சமம் மத்திமம்
மத்திமத்திற்குப் பஞ்சமம் ஷட்ஜம்
ஷட்ஜத்திற்குப் பஞ்சமம் பஞ்சமம்
பஞ்சமத்திற்குப் பஞ்சமம் ரிஷபம்
ரிஷபத்துக்குப் பஞ்சமம் தைவதம்.

ஆதலினுலே பழந்தமிழர்கள் ஏழிசைகளையும் கிளைமரபாக (ஒன்றினுக்கொன்று பஞ்சமமாக)ப் பிறப்பித்தார்களென அறிகின்றும். நின்றநரம்பிற்குப் பதின்மூன்றும் அலகிலே (சுருதியிலே) கிளைநரம்பு ஒலிக்கும்.

கிளைக்குக்கிளை இருபத்தாறும் அலகிலே ஒலிக்கும். அலகுத் தொகை இருபத்திரண்டின் மேற்படுமிடத்து இருபத்திரண்டைக் கழித்துக்கொள்ளல்வேண்டும். மேலே இருபத்தாறில் இருபத்திரண்டைக் கழிக்கக் கிடைப்பது நான்கு. ஆதலினுலே கிளைக்குக் கிளை நான்காம் அலகிலே ஒலிக்குமெனக் கண்டாம். கிளைக்குக் கிளைக்குக் கிளை (அஃதாவது கிளைமுக்கோடு) நான்கினேடு பதின்மூன்று சேர்க்க வரும் பதினேழாம் அலகிலே ஒலிக்கும். கிளை நாற்கோடு பதினேழுடன் பதின்மூன்றினைச் சேர்த்து இருபத்திரண்டைக் கழிக்க வரும் எட்டாம் அலகிலே ஒலிக்கும். கிளை ஐங்கோடு எட்டுடன் பதின்மூன்றினைச் சேர்க்கவரும் இருபத்தோராம் அலகிலே ஒலிக்கும். கிளை அறுகோடு இருபத்தொன்றுடன் பதின்மூன்றினைச் சேர்த்து இருபத்திரண்டைக் கழிக்கவரும் பன்னிரண்டாம் அலகிலே ஒலிக்கும்.

இவ்வாறுபெற்ற முடிபுகளைப் பிறப்புமுறையாக வைக்கக் கிடைப்பது,

| க > | நி > | ம > | ச > | ப > | ரி > | த |
| --- | --- | --- | --- | --- | --- | --- |
| 0 | 13 | 4 | 17 | 8 | 21 | 12 |

ஒரு தானத்திற்கு 22 அலகு ஆதலின் மெலிவுத்தானத்திலே 'க' நின்ற இடம் '0' ஆயின் சமன்தானத்திலே 'க' நின்ற இடம் '22' ஆகும்.

'க' முதல் 'க' ஈறாகிய எட்டுநரம்புகளையும் நிரலாகவைத்து அவை நின்ற இடங்களையுங் குறிக்கக் கிடைப்பது:

| க | ம | ப | த | நி | ச | ரி | க |
| --- | --- | --- | --- | --- | --- | --- | --- |
| 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 | 22 |

நரம்புநின்ற எண்ணிலிருந்து அதற்கு முன்னுள்ள எண்ணைக் கழிக்கக் கிடைப்பது நரம்பின் அலகு.

| | | |
| --- | --- | --- |
| ம (குரல்) | 4— 0=4 | அலகு |
| ப (துத்தம்) | 8— 4=4 | அலகு |
| த (கைக்கிளை) | 12— 8=4 | அலகு |
| நி (உழை) | 13—12=1 | அலகு |
| ச (இளி) | 17—13=4 | அலகு |
| ரி (விளரி) | 21—17=4 | அலகு |
| க (தாரம்) | 22—21=1 | அலகு |

அங்ஙனமாதலின் பழந்தமிழ்த்தாரக்கிரமத்திலே தாரமும் உழையும் ஒவ்வோர் அலகுபெற எஞ்சிநின்ற ஐந்தும் தனித்தனி நான்கு அலகு பெறுவனவெனக் கண்டாம்.

நின்றநரம்பினுள்ளே கிளைநரம்பு பிறக்குமென்பதைச் செவி கருவியாகவும் நரம்பின் நீளத்தைக்குறிக்கும் எண்கருவியாகவும் ஆராயலாம்.

சிலப்பதிகாரம் கானல்வரியிலே பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு எனக் கூறிய எட்டனுள்ளே ஆராய்தலுக்கு அரும்பதவுரையாசிரியர் கூறிய இலக்கணம் வருமாறு:—

'ஆராய்த லென்பதமைவரக் கிளப்பிற்
குரன்முத லாக இணைவழி கேட்டும்

இணை யிலாவழிப் பயனொடு கேட்டும்
தாரமும் உழையும் தம்மிற் கேட்டும்
குரலும் விளரியும் தம்மிற் கேட்டும்
துத்தமும் விளரியும் துன்னறக் கேட்டும்
விளரி கைக்கிளை விதியுளிக் கேட்டும்
தளரா தாகிய தன்மைத் தாகும்'

இடத்தால் இணைவு, ஓசையால் இணைவு எனும் இரண்டுபொருளிலும் பழைய இசைநூலாசிரியர்கள் 'இணை' யென்னும் சொல்லினை வழங்கினார்கள்.

கமபதநிசரிக என்னும் எட்டுநரம்புகளிலும் 'ம' என்னும் இரண்டாம்நரம்பும், 'ரி' என்னும் ஏழாம்நரம்பும் நின்றநரம்பாகிய 'க'வுக்கு இடத்தால் இணைந்துநின்றன. ஐந்தாம் நரம்பாகிய 'நி' நின்ற நரம்பிற்குக் கிளைநரம்பாகவும், நான்காம் நரம்பாகிய 'த' நின்றநரம்பிற்கு நட்புநரம்பாகவும் ஓசையால் இணைந்துநின்றன. இவையொழிந்த மூன்றும் ஆறும் நரம்புகள் இணையாநரம்பாய்ப் பகைநரம்பாயின. இங்ஙனம் ஆராயுமிடத்து ஓசைநோக்கி, இணையும் நரம்பு இணையாநரம்பு என இருபடியாக்கி, அவை தம்முள் இணையும் நரம்பினை இணை, கிளை, நட்பு என மூன்றுக்கினரென அறிதல் வேண்டும்.

மேற்காட்டிய ஆராய்தல் இலக்கணச்சூத்திரத்திலே 'குரன் முதலாக இணைவழிகேட்டும்' என்னுமிடத்து இணையென்றது ஓசையிணைவனவாகிய இணை, கிளை, நட்பு என்னும் மூன்றினையுமாம். இவை தம்முள்ளே கிளைநரம்பு இணைவு இன்றியமையாது வேண்டப்படுவவாதலின், தாரமும் உழையும், குரலும் இளியும், துத்தமும் விளரியும், விளரியும் கைக்கிளையும் என நான்குபடி ஆராய்க என்றார். மேலே பிறப்புமுறை ஆராய்ச்சியிலிருந்து உழையும் குரலும் என ஒருபடியும், இளியும் துத்தமும் என ஒருபடியும் உளவென அறிகின்றோம். இக்காலத்தார் இளியும் துத்தமும் 'ச-ப' இணைந்துநிற்பதனைச் செவிகருவியாகக்கேட்டு உணர்வர். இவ்விணையிலே பிறக்கும் இனிய ஓசையே 'ப-ரி' 'ரி-த' 'க-நி' 'நி-ம' 'ம-ச' என்னும் ஐந்தினும் கேட்கப்படும். 'த-க' இணையாமைக்குக் காரணமும், 'இணையிலாவழிப் பயனொடுகேட்கும் மாபினையும்' பாலைத்திரிபு உரைக்கும்வழிக் காட்டுவாம்.

பாணன் யாழ்நரம்பிற்கு இசைகூட்டுமிடத்து முதல்நரம்பாகிய தாரத்தைச் செவிகருவியாக அமைத்துக்கொள்ளுவான். 'தாரமும் உழையுந் தம்மிற்கேட்டு' உழைநரம்பினை இசைகூட்டுவான். உழையும் குரலும் ஒருங்குகேட்டுக் குரல்நரம்பினை இசைகூட்டுவான். 'குரல்வாய் இளிவாய்க்கேட்டு'க் குரல்நரம்பிற்கு இசைகூட்டுவான். இளியையுந் துத்தத்தையும் ஒருங்கிசைத்துத் துத்தநரம்பிற்கு இசைகூட்டுவான். 'துத்தமும் விளரியுந் துன்னறக்கேட்டு' விளரி நரம்பிற்கு இசைகூட்டுவான். 'விளரி கைக்கிளை விதியுளிக்கேட்டு'க் கைக்கிளைநரம்பிற்கு இசைகூட்டுவான். இக்காலத்துக் குறியீட்டெழுத்துக்களாற் சொல்லுமிடத்து 'ச - ப' முறையாகக் 'க - நி' 'நி - ம' 'ம - ச' 'ச - ப' 'ப - ரி' 'ரி - த' என நரம்புகளைத் தெறித்து எழுநரம்பிற்கும் இசைகூட்டுவான். எண்முறையாக நரம்புநீளங்களை அறிவது விரிந்தபொருளாதலின் அதனைப் பின்னொருபொருளுரையிலே தனியாக ஆராய்வாம்.

இவ்வாறு பழைய பாணன் முதலிலே பெற்ற எழுஸ்வரங்களும் இக்காலத்தார்வழங்கும் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களிலே எந்த ஸ்வரஸ்தானங்களிலே நின்றனவென்பதை இனி ஆராய்தல்வேண்டும். இப்பொருள், விரிவாகப் 'பாலைத்திரிபு' என்னும் தலைப்பெயர்க்கீழ் ஆராயப்படும். இங்குச் சுருக்கமாகக்குறிப்பிடுவாம்.

சிலப்பதிகாரம் வேனிற்காதை ௩௫-ஆம் அடி 'குரல்வாய் இளிவாய்க் கேட்டனள்' என்பதற்கு அடியார்க்குநல்லார் உரைகூறுமிடத்து, 'அந்தரம் ஐந்தும் நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க' என்றாராதலின், ஏழு இசைநரம்புகளின் வேறாக ஐந்து அந்தரக்கோல்கள் உளவெனப்பெற்றாம். ஏழும் ஐந்தும் பன்னிரண்டு. இவையே 'ஆய்ச்சியர்குரவை'யினுள்ளே பன்னிரண்டு இராசிவீடுகளாகக் காட்டப்பட்டன. இவை நேரிசைமண்டிலம் எனவும் குறிக்கப் பட்டன.

'துலைநிலைக் குரலும் தனுநிலைத் துத்தமும்
நிலைபெறு கும்பத்து நேர்கைக் கிளையும்
மீனத் துழையும் விடைநிலத் திளியும்
மானக் கடகத்து மன்னிய விளரியும்
அரியுடைத் தாரமும் அணைவுறக் கொளலே'

'இளியிடபங் கற்கடகமாம்விளரி சிங்கம்
தளராத தார மதுவாம்—தளராக்
குரல்கோற் றனுத்துத்தம் கும்பங் கிளையாம்
வரலா வுழைமீன மாம்'

'குரறுலை விற்றுத்தம் கைக்கிளையே கும்பம்
பரிய வுழைமீனம் பாவாய்—அரிதாரம்
கொல்லே றிளிவிளரி கற்கடகங் கோப்பமைந்த
தொல்லே ழிசைநரம்பிற் காம்'

என்னும் உரைச்சூத்திரங்களிற் கூறியவாறு ஏழு நரம்புகளையும் நிறுத்தி அவைநின்ற அலகு எண்களையும் குறிப்பாம்.

| இராசி | நரம்பு | அலகேண் |
|---|---|---|
| மேடம் | | |
| இடபம் | இளி—ச | 17 |
| மிதுனம் | | |
| கற்கடகம் | விளரி—ரி | 21 |
| சிங்கம் | தாரம்—க | 22 |
| கன்னி | | |
| துலாம் | குரல்—ம | 4 |
| விருச்சிகம் | | |
| தனு | துத்தம்—ப | 8 |
| மகரம் | | |
| கும்பம் | கைக்கிளை—த | 12 |
| மீனம் | உழை—நி | 13 |

மேடம், மிதுனம், கன்னி, விருச்சிகம், மகரம் என்னும் ஐந்துவீடுமே ஐந்து அந்தரக்கோல்களின் இடமாகும். இவ்வந் தரக்கோல்கள் நட்புமரபாக அமைந்துநிற்பன.

நின்ற நரம்பிற்கு ஒன்பதாம் அலகிலே நட்புநரம்பு ஒலிக்கும். நட்புக்குநட்பு பதினெட்டாம் அலகில் நின்றது. நட்புக்குநட்புக்கு நட்பு (நட்பு முக்கோடு) பதினெட்டினோடு ஒன்பது சேர்த்து இருபத்திரண்டினைக் கழிக்கப்பெற்ற ஐந்தாம் அலகிலே நின்றது. நட்பு நாற்கோடு ஐந்தினோடு ஒன்பது சேர்க்கவரும் பதினுன்காம் அலகிலே ஒலிக்கும். நட்பு ஐங்கோடு பதினுன்கினோடு ஒன்பது சேர்த்து இருபத்திரண்டினைக் கழிக்கவரும் முதலாம் அலகிலே ஒலிக்கும். ஆகவே, அந்தரக்கோல்கள் ஐந்தும் நிற்கும் அலகெண்கள் 9, 18, 5, 14, 1 ஆம். இவற்றை மேற்கண்ட நரம்புநிலை அலகெண்களிடையே நிரலுறவைக்குமிடத்துப் பெறப்படுவன. கன்னி 1, விருச்சிகம் 5, மகரம் 9, மேடம் 14, மிதுனம் 18 ஆகும். பன்னிரண்டு இராசிவீடுகளையும் நிரையாகவைத்து மேலேபெற்ற பன்னிரண்டு அலகெண்களையும் எழுதிக்கொள்க.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 14 | 17 | 18 | 21 | 22 | 1 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 |

ஓர் இராசிவீட்டின் அலகு அளவினைக் காண்பதற்கு அதன் கீழுள்ள எண்ணிலிருந்து முன்னுள்ள எண்ணினைக் கழித்துக் காண்க. இங்ஙனம் கழித்துக்கண்ட எண்களை இராசிகளின்கீழ் எழுதி ஏழுநரம்புகளையும் அவைதமக்குரிய வீடுகளில் நிறுத்துக.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| | இளி | | விளரி | தாரம் | | குரல் | | துத்தம் | | கைக்கிளை | உழை |

இளிநரம்பு மேடம் இடபம் இரண்டினுக்குமுரிய 4 அலகு பெறுகின்றது. விளரி மிதுன கற்கடகங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. தாரம் சிங்கத்திற்குரிய ஓரலகு பெறுகின்றது. குரல் கன்னி துலாத்திற்குரிய 4 அலகு பெறுகின்றது. துத்தம் விருச்சிக தனுவினுக்குரிய 4 அலகு பெறுகின்றது. கைக்கிளை மகர கும்பத்திற்குரிய 4 அலகு பெறுகின்றது. உழை மீனத்திற்குரிய ஓரலகு பெறுகின்றது. இது தாரக்கிரமம்.

விளரி கைக்கிளை இடம்வேறுபடாதுநிற்க, ஏனைய ஐந்தும் ஒரு வீடு தள்ளிநிற்பது இளிக்கிரமம். இதுவே ஷட்ஜக்கிராமம். இக் காலத்துக் குறியீட்டெழுத்துக்களாற் காட்டுவாம்.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மே | இ, | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ம | | ப | த | |

ஷட்ஜம் இடப மிதுனங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. ரிஷபம் கற்கடகத்திற்குரிய 3 அலகு பெறுகின்றது. காந்தாரம் சிங்கம் கன்னிக்குரிய 2 அலகு பெறுகின்றது. மத்திமம் துலாம் விருச்சிகங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. பஞ்சமம் தனுமகரங் களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. தைவதம் கும்பத்திற்குரிய 3 அலகு பெறுகின்றது. நிஷாதம் மீன மேடங்களுக்குரிய 2 அலகு பெறுகின்றது. இவையனைத்தும் சுத்தஸ்வரங்கள். வெற்றிடங்கள் ஐந்தில் நிற்பன: சிங்கத்தில் சதுஸ்ருதிரிஷபம், துலாத்தில் அந்தர காந்தாரம், தனுவில் பிரதிமத்திமம், மீனத்தில் சதுஸ்ருதி தைவதம், இடபத்தில் காகலிநிஷாதம். ஷட்ஜத்தை மேருவாக(தொடங்கு மிடமாக)வைத்துப் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களுக்குமுரிய சுருதிநிலையங்களை (அலகுநின்றவிடங்களை)க் கணக்கிடுவாம். ஸ்வரஸ்தானத்துச் சுருதித்தொகையோடு முன்னுள்ள சுருதித் தொகைகளைக் கூட்டியெழுதுக.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| கைசிகி - நி | காகலி - நி | ஷட்ஜம் | சுத்த - ரி | சதுஸ்ருதி - ரி | சாதாரண - கா | அந்தர - கா | சுத்த - ம | பிரதி - ம | பஞ்சமம் | சுத்த - தை | சதுஸ்ருதி - தை |
| 18 | 21 | 0 22 | 3 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 16 | 17 |

பழைய இசைமரபுமுடிபுகளோடு இக்காலத்து இசைமரபினை ஒப்பவைத்து நோக்குதற்குச் சுருதியெண்களைக் கருவியாகக் கொள்ளலாம். ஷட்ஜத்தைத் தொடங்குமிடமாகக்கொண்ட இருபத்திரண்டு சுருதிஸ்தானங்களிலே 3-ஆம் சுருதிஸ்தானம் சுத்தரிஷபம், 4 சதுஸ்ருதிரிஷபம், 5 சாதாரணகாந்தாரம், 8 அந்தரகாந்தாரம், 9 சுத்தமத்திமம், 12 பிரதிமத்திமம், 13 பஞ்சமம், 16 சுத்ததைவதம், 17 சதுஸ்ருதிதைவதம், 18 கைசிகிநிஷாதம், 21 காகலிநிஷாதம், 22 ஷட்ஜம் என அறிக. சுருதி எண்களைக் கொண்டு கணக்கிடும்போது இராசிவீட்டைக் கருதவேண்டியதில்லை.

பாணன் காந்தாரத்திலே தொடங்கி ஒன்றினுக்கொன்று பஞ்சமமாக முதலிலே பிறப்பித்துக்கொண்ட ஏழிசைநரம்புகளும் 4-8-12-13-17-21-22-ஆம் சுருதிஸ்தானங்களிலே நின்றன என முன்னர்க் காட்டினும். ஷட்ஜக்கிராமத்திலே இவை சதுஸ்ருதிரிஷபம், அந்தரகாந்தாரம், பிரதிமத்திமம், பஞ்சமம், சதுஸ்ருதிதைவதம், காகலிநிஷாதம், ஷட்ஜம் என நின்றனவென்பது மேலே கணித்துக்காட்டிய சுருதியெண்களால் அறியக்கிடக்கின்றது. வேங்கடமகிவகுத்த மேளகர்த்தாராகங்களிலே இது 65-ஆம் மேளமாகிய மேசகல்யாணி ஆகும். பாணனதுயாழிலே மேசகல்யாணி முதற்பிறந்ததாயினும், பண்டையோர் இதனைப் பெரும்பண்வரிசையில் வைக்கவில்லை; ஏழ் பெரும்பாலையினுள் ஒன்றாக்கினர்.

மத்திமக்கிராமத்தினை இனி ஆராய்வாம். விளரி (ரி), கைக்கிளை (க) இடம்வேறுபடாதுநிற்க, ஏனைய ஐந்தும் ஒருவீடு தள்ளிநிற்பது ஷட்ஜக்கிராமம் என மேலே காட்டினும். ரி-த-ப மூன்றும் இடம் வேறுபடாதுநிற்க எஞ்சிய நான்கும் ஒருவீடு தள்ளிநிற்பது மத்திமக்கிராமமாம். பழையபடி இராசிவீடுகளிலே இவற்றை நிறுத்தக் கிடைப்பது.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ம | ப | | த | |

இந்தக்கிராமத்திலே ம-ப-த-நி-ச-ரி-க-என்னும் ஏழும் 4-3-4-2-4-3-2 என அலகுபெற்றுநின்றன என்பது மேற்காட்டிய இராசிநிலைகளினின்று தெரியக்கிடக்கின்றது.

[தொடரும்]

---

# கம்பராமாயணசாரம்

[தமிழ்ப்பெருங்கவி, முதுபெரும்புலவர்,

ஸ்ரீ. ராவ்சாகிப் வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

௩௭௪-ஆம் பக்கத் தொடர்ச்சி.

## இராவணன்சோகப்படலம்

இந்திரசித்து இறந்ததனால் இராவணன் துயாமுற்றதைச் சொல்லுவது.

### இந்திரசித்து இறந்ததை இராவணனுக்குத் தூதர் சொல்லுதல்

[ தூதர்கள், போர்க்களத்திலிருந்து புறப்பட்டுத் துளைக்கப்பட்ட மேருமலைபோலத்தோன்றிய இலங்கைமதிற் கோபுரவாயிலுள் நுழைந்து, (இந்திரசித்து இறந்ததுதெரிந்து வருந்தி அரண்மனையிலுள்ளாரோடு துக்கங்கொண்டாடும் முறையாக) இராட்சசிகள் (ஆண் துணையிழந்த) பெட்டையன்றிற்பட்சிகள்போலக் கதறிக்கொண்டிருந்த அரண்மனைமுற்றத்தைக் கடந்து, உள்ளேசென்று, இராவணன் இருந்த இடத்தை அடைந்தார்கள். அவர்கள், (இந்தத் துக்கசமாசாரத்தைச் சொன்னால், இராவணன் தங்களைக் கொன்றிடுவானென்ற) பயத்தினால் நடுங்கிக்கொண்டு 'உன் மகன் (இந்திரசித்து) இன்று இல்லையாயினன்.'* என்று சொன்னார்கள்.

### இந்திரசித்து இறந்ததுகேட்ட இராவணன் மெய்ப்பாடு†

உடனே, இராவணனருகே பணிசெய்துகொண்டுநின்ற தேவர்களும் மாதர்களும் மற்றவர்களும், மகன் கொல்லப்பட்டதனால் உண்டாகும் கோபத்தினால் அவன் உலகத்தையெல்லாம் அழித்திடுவானென்ற அச்சத்தினால் பலதிசைகளிலும் சிதறியோடி

---

* 'இல்லை யாயின னுன்மக னின்'றெனச்
சொல்லி னார்பயம் சுற்றத் துளங்கினர்.

துளங்குதல் - நடுங்குதல்.

† உள்ளத்து நிகழ்ச்சியை வெளிக்காட்டும் உடற்செயல்.

ஒளித்துக்கொண்டனர். அவன், வாளை உருவித் தூதரை வெட்டினன்.* (அவர்கள் கீழேவிழுதற்குமுன்பு, அவர்களை வெட்டிய) கைகள் சோர்ந்திட(க் கோபத்தையும் சோகத்தையும் தாங்கமாட்டாதவனய்க்) கீழே விழுந்தான். மகனைக்கொன்ற பகைவரிடத்துக் கோபமும் மகன்பால் அன்பும் அவன் இறந்ததுன்பும் பெருகக் கண்ணீர் பெருக்கினன். கோபத்தாற் பற்களை நெறுநெறெனக் கடித்துக் கைகளைத் தரையில் அறைந்தான். ]

இராவணன் புலம்பல்

174 மைந்த வோவெனு மாமக னேயெனும்
எந்தை யோவெனு மென்னுயி ரே[1]யெனும்
முந்தி னேனுனை நானுள னே[2]யெனும்
வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்.[3]

கொண்டுகூட்டு: வெந்தபுண்ணிடை வேல்பட்ட வெம்மையான், மைந்த! ஓ!! எ(ன்)னும்; மாமகனே! (எ(ன்)னும்; எந்தை! ஓ!! எ(ன்)னும்; என் உயிரே! எ(ன்)னும்; 'உனைமுந்தினேன் நான் உளனே எ(ன்)னும்.

பொருள்: வெந்தபுண்ணிலே வேல்பட்டாற்போன்ற கொடுந் துன்பமுடையவனான இராவணன், மகனே! ஓ!! என்பான்; தலைமகனே! என்பான்; என் அப்பனே! ஓ! என்பான்; என் ஆவியே! என்பான்; (நீ இறந்தாயே!) உனக்கு மூத்தவனாகிய நான் (உயிரோடு) இருக்கின்றேனே! என்பான்.

மைந்தன் - மகன். ஓ, இரக்கச்சொல். மாமகன் - பெருமகன் - தலைமகன். எந்தை - என் தந்தை. உளனே என்பதில், ஏகாரம் இரக்கச்சொல்.

'உளனே' என்பதில் ஏகாரத்தை எதிர்மறையேகாரமாகக்கொண்டு, 'முந்தினேன் உனை. நான் உளனே' என்பதற்கு '(விண்ணுலகை அடைதலில்) உனக்கு முந்தினேன் (ஆவேன்). நான் இங்கே, (மண்ணுலகத்திலே) இருப்பேனல்லேன்—இரேன்' என்றும் பொருள்கூறலாம். மூன்றும் அடியில் மோனையில்லை.

பாடபேதம்: [1] என்மகனே. [2] உளனு, உளனே. [3] வெம்மையால்.

---

* படைவீரர், தம்கடமையாகிய போர்செய்தலில் வெற்றியுற்று வெகுமதிபெறுதற்கும், தோற்று இறத்தற்கும், உரியராயிருத்தல்போலத் தூதர்கள் நற்செய்திக்கு நன்கொடையும் தீச்செய்திக்குச் சிரச்சேதமும் அடைபவராயிருந்தனர்.

[ 'இந்திரனுக்குப் பகை போயிற்றே!' என்பான். 'துன்புற்ற வானவர் இன்புற்று ஆரவாரித்தாரோ!' என்பான். '(உனக்குப் பயந்து) மலைக்குள்ளும் கடலுக்குள்ளும் ஒளித்திருந்த(தனால் கைலாசபதியென்றும் பாற்கடல்நாதனென்றும் பேர்பெற்ற)வரான சிவனும் திருமாலும் பகைநீங்கப்பெற்று (முன் வெளியே வந்தால் உன்னால் நேருவதாயிருந்த) இடையூறுநீங்கிக் காளைமீதும் கருடன் மீதும் ஏறி (அச்சமற்று) உலாவுவாரே!'* என்பான். 'ஒரு மனிதன் கொல்ல, என் மகன் இறந்தானே!' என்று பலமுறை கூறுவான். 'மகனே! மகனே!' என்று குரல்விடுத்துக் கூப்பிடுவான்.

## இராவணன் துயரநிலை

(தூதரைவெட்டியகை சோர விழுந்து, கிடந்தபடியே இவ்வாறு புலம்பிய இராவணன், கிடையினின்று) எழுவான், இருப்பான், நடப்பான், பரிதபித்து அழுவான், அரற்றுவான், அயர்ப்பான், வியர்ப்பான், (கிடையினின்றெழுந்தவன், திரும்பவும் கிடையாக) விழுவான், கண்களை மூடுவான், திறப்பான், உருளுவான், புரளுவான்.†

## இராவணன்தலைகள் தனித்தனி புலம்பல்

'ஐயனே!' என்னும் ஒருதலை; 'இன்னமும் யான் அரசு செய்வேனே!' என்னும் ஒருதலை; '(பகைவனுக்கு) உன் (உயிரி)னைக் காட்டிக்கொடுத்த (கொடுமையுடைய) நான் (முடிதரித்து அரசு செய்தல் கிடக்க,) உயிர்தரித்து இருப்பேனே!' என்னும் ஒருதலை;

---

* 'நீறு பூசியும் நேமியும் நீங்கினர்
மாறு குன்றொடு வேலை மறைந்துளார்
ஊறு நீங்கின ராயுவ ணத்தினே
டேறும் ஏறி உலாவுவ ரே! எனும்'

மாறு நீங்கினர் - பகைநீங்கியவர் (ஆகி). குன்று - (கயிலை) மலை. வேலை - (பாற்)கடல். ஊறு - இடையூறு. உவணம் - கருடன். ஏறு - காளை.

† எழும், இருக்கும், நடக்கும், இரக்கமுற்
றழும், அரற்றும், அயர்க்கும், வியர்க்குமால்
விழும், விழிக்கும், முகிழ்க்கும், தன் மேனியால்
உழும்நி லத்தை, உருளும் புரளுமால்.

அரற்றல் - கதறல். அயர்த்தல் - (தன்னை) மறத்தல். முகிழ்த்தல் - (கண்ணை) மூடுதல்.

'என்னை உன் சந்தனக்கோலமெழுதிய தோள்களால், தழுவிக் கொள்ளாதிருக்கின்றாயே!' என்னும் ஒருதலை; 'வில்வீரனே, புலியேற்றை மான் கொன்றதே!' என்னும் ஒருதலை; 'சிவபெருமானும் திருமாலும் எதிர்த்தெறிந்த படைகளையெல்லாம் (உன் படைகளால் பயனற்றுத்) தோல்வியுறச்செய்தாயே!' என்னும் ஒருதலை; 'இறந்திட்டாயோ! துணையைப் பிரிந்திட்டேனே! இனித் திரும்பி வரமாட்டாயோ! (என்றெல்லாம் எண்ணி) நெஞ்சுவருந்த நெடுநேரம் கிடையிற் கிடந்து அஞ்சுகின்றேன்!' என்னும் ஒருதலை; '(இந்திரனை வெற்றிகொண்டு அந்த வெற்றிக்கு அறிகுறியாகப் பூண்டிருந்த வாகைமாலையை (நீ இறந்துகிடக்கும்) போர்க்களத்திலே பார்(க்கச் சகி)ப்பேனோ!' என்னும் ஒருதலை; '(முன் எத்தனையோ இயக்கிமார் உன் வில்நாணொலிகேட்டவர், பின்பு அவ்வில்லால் தம் கணவர் இறந்ததறிந்து வருந்தித் தாலிகளைந்ததைக் கண்டிருக்கின்றவராக உள்ள, இப்போது சுமங்கலியாயிருக்கின்ற) இயக்கிமார், இனி உன் வில்லொலிகேட்டு (அந்த வில்லால் தம் கணவர் இறந்து, தம் தாலி களையப்பட்டுவிட்டதோவென்று) நடுங்கித் (தம் தாலி போயேபோய்விட்டதோவென்று தெரியத்) தம் தாலியைத் தொட்டுப்பார்த்தலைத் தவிர்வார்களே!'* என்னும் ஒருதலை; '(மற்றவர்கள் இறக்கும்போது அவர்களுயிர்களைக்கொள்ளும்) எமனுக்கு உன் உயிரைக்கொள்ளும்வலிமை யில்லை. (ஆகையினால், அவன் உன்னைக் கொண்டுபோனானல்லன்; நீயே உன் உடலைவிட்டு எனக்குத்தெரியாமல் ஒளித்துப்போயிருக்கின்றாய்!) எந்த உலகத்திற்குப் போயிருக்கின்றாய்? சொல்' என்னும் ஒருதலை.

### இராவணன் போர்க்களத்தில் இந்திரசித்தின் உடலைத் தேடுதல்

இவ்வாறு (கிடையிற் கிடந்தபடியே) கதறி ஏங்கியவன், எழுந்து, நினைக்குமுன்னே போர்க்களத்துக்கு ஓடிப்போய்ச்

---

* சேலி யற்கண் இயக்கர்தந் தேவிமார்
மேலி னித்தவிர் கிற்பர்கொல், வீரநின்
கோல விற்குரல் கேட்டுக் குலுங்கித்தம்
தாலி யைத்தொடல் என்னுமற் றோர்தலை.

சேல் இயல் கண் - சேல் (மீன்) தன்மையுடைய கண் - சேல்மீனை ஒத்த கண். தவிர்தல் - ஒழிதல். கோலம் - அழகு. குரல் - தொனி.

சேர்ந்து, தன் மகனுடம்பைத் தேடுவானுனன். தேவரான ஏவலாளர், அவனைத் தொடர்ந்துசென்றார்கள். வீரர்பிணங்களை யும் குதிரைப்பிணங்களையும் ஆனைப்பிணங்களையும் தேர்களையும் புரட்டி ஒருநாள்முழுதும் தன் மகனுடம்பைத் தேடினான். தேடியவன், கண்களிலே துக்கநீர் சொரிகின்றவனாய், நெஞ்சிலே கோபாக்கினி எரிகின்றவனாய், வில்லோடு (அறுப்புண்டு) கிடந்த (இந்திரசித்தின்) கையைக் கண்டான்.*

## இந்திரசித்தின் கையைக் கண்ட இராவணன்செயல்

இராவணன், தான்கண்ட இந்திரசித்தின் கையையெடுத்துத் தன்தலைமேல் வைத்துக்கொண்டான்; மார்போடு சேர்த்துத் தழுவிக்கொண்டான்; கழுத்திலே சுற்றிக்கொண்டான்; (திரும்பத்) தலையிலே சூட்டிக்கொண்டான்; கண்களிலே ஒற்றிக்கொண்டான்; உருகினான்; வருந்தினான்; ஆயுள்முடியுங்காலத்திலேவிடும் பெரு மூச்சுடையவனானான்.†

## இந்திரசித்தின் உடலைக் கண்ட இராவணன்செயல்

பின்பு, இராவணன், மகனுடம்பைக்கண்டு, அதன்மேல் விழுந்து தழுவினான். மார்பில் தைத்திருந்த அம்புகளைப் பறித்து முறித்தான்; மூர்ச்சித்தான். (மூர்ச்சைதெளிந்து) அந்த உடம்பைத் திரும்பவும் தழுவினான். எங்கும் தேடியும் காணாமையால், தலையைப் பகைவர்எடுத்துக்கொண்டுபோய்விட்டனரென்றுகருதினான்.

* மெய்கிடந்த விழிவழி நீர்உக,
நெய்கிடந்த கனல்புரை நெஞ்சினான்
மொய்கிடந்த சிலையொடு மூரிமாக்
கைகிடந்தது கண்டனன் கண்களால்.

மெய் கிடந்த விழி - உடம்பில் (உள்ள முகத்தில்) தங்கிய கண். உக - சிந்த. மொய் - வலி. சிலை - வில். மூரிமாக் கை - வலிய பெரிய கை. கண்டது கோரக்காட்சியென்பது குறிக்கக் 'கண்களால்' என்றார்.

† கற்றிண் மார்பில் தழுவும்; கழுத்தினில்
சுற்றும்; சென்னியில் சூட்டும்; சுழல்கணோ
டொற்றும்; மோந்திட் டுருகும்; உழைக்குமால்:
முற்றும் நாளில் விடுநெடு மூச்சினான்.

கல் திண் மார்பு - மலை(போலும்) திண்ணிய நெஞ்சு. உழைத்தல் - வருந்துதல்.

## இந்திரசித்தின் உடலைநோக்கித் தன்குறைகூறி இராவணன் புலம்பல்

'திசைகளிலே நிலையாகநிற்கும் யானைகளும் சிவனுடைய கயிலைமலையுமட்டுமோ, நான் அழித்தற்கு எளியவை? (அற்பமனிதர், அழித்தற்கு எளியரல்லரோ?) குற்றமற்ற என்மகன் தலையையும் அருமையான உயிரையும் கொண்டவரான பகைவர், உடலோடுந் தங்கியிருக்க, (அவர்களைக் கொல்லாமல்) இழிஞனேன் இங்கே உயிரைச் சுமந்துகொண்டிருக்கின்றேன்! நன்று!! நன்று!!!'*

'நான் கொளுத்திய நெருப்பினால், குபேரநகரமான அளகாபுரி, எரிந்து (சாம்பலாகப்)போகவும், இந்திரன் இருப்பிடம் (ஆன அமராவதி), பொரிந்து (பொடியாகப்) போகவும் செய்து, வேறெவருக்கும்) பொது(ப்பாத்தியம்) இல்லாதபடி மூன்றுலகங்களையும் (ஏகபோகமாகத் தனி) அரசாட்சிசெய்த நான்தானா, என்மகனுடைய தலையிழந்தவுடலை நரிதின்னக் காண்பேனானேன்! (சீ!) நான் உண்ணும் உணவினும் நாயுண்ணும் உணவு நல்லது!'†

---

* நிலையில்மா திரத்து நின்ற யானையும் நெற்றிக் கண்ணன்
மலையுமே எளிய வோநான் மறித்தற்கு? மறுவில் மைந்தன்
தலையுமா ருயிருங் கொண்டா ரவருட லோடும் தங்கப்
புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும் போலும்.

மறித்தல் - அழித்தல் (தமிழகராதி). மறு இல் - குற்றமில்லாத. ஆருயிர் - அருமையான உயிர். புலையனேன் - இழிஞனேன் - இழிவுடையேன். 'போலும்போலும்' என்ற தொடர், (என்செயல்) இகழத்தக்கது; மிகவும் இகழத்தக்கது. என்ற குறிப்புப்பொருள்கொள்ளநின்றது.

'கொண்டார்' என்பதற்கு 'எதிரிகள்' என்பது தோன்றா எழுவாயாகக் கொள்ளலாம்; அல்லது, 'கொண்டாரவர்' என்பதை ஒருசொல்லாகக் கொண்டு, 'அவர்' என்பதைப் பகுதிப்பொருள்விகுதியாகக்கொள்ளலாம்.

† எரியுண அளகை மூதூர்; இந்திர னிருக்கை யெல்லாம்
பொரியுண, உலக மூன்றும் பொதுவறப் புரந்தேன் போலாம்
அரியுணும் அலங்கல் மௌலி இழந்தஎன் மதலை யாக்கை
நரியுணக் கண்டே னுணின் நாயுணும் உணவு நன்றால்.

மூதூர் - முது ஊர் - பழைய ஊர். புரந்தேன் - காத்தேன் - காவல் செய்தேன் - அரசுசெய்தேன். 'புரந்தேன் போலாம்' என்பது புரந்த நான் தானா? என்ற குறிப்புப்பொருள்கொள்ளநின்றது. அரி - வண்டு. அலங்கல் - மாலை. மௌலி - தலை (தமிழகராதி). ஆக்கை - உடம்பு.

(போர்க்கோலம்) பூண்டு ஒரு பகைவன் (இலக்குமணன்)மேற் (போர்செய்யப்)புகுந்து என்மகனுடன் (போர்க்களத்துக்குப்) போனவர்கள், (ஒருவரும்) திரும்பிவந்தாரில்லை. (எல்லாரும்), இறந்தொழிந்தார்கள். (அதே) போர்க்களத்திலே, (எதிரிகளாகிய) இரண்டுமனிதருள்ளே யாராயினும் ஒருவனும் குரங்குகளுள்ளே யாதாயினும் ஒன்றும் இறந்தபாடில்லை. இராவணன் வீரவாழ்க்கை (இந்த இழிவான சம்பவங்களால் அழிந்தது. அது,) இன்னும் இருக்கிறதோ.*

கந்தருவர், இயக்கர், சித்தர், இராக்கதர் ஆகியவர்களின் பெண்கள், பண்போலினிய சொல்லினுர்கள், இலக்குமியைக்காட்டிலும் மிக்க அழகுடையவர்களான உன் மனைவிமார் வந்து, 'எங்கள் கணவனைக்காட்டு' என்று என்பக்கத்து (அலறி அழுது) விழுந்தால், அப்படியே (அவர்கள் அழுதபடியே, அவர்களோடு) ஒக்க, யமனையும் வெற்றிகொண்ட நானும் அரற்றவோ.†

---

* பூண்டொரு பகைமேற் புக்கென் புத்திர னோடு போனார்
மீண்டிலர்; விளிந்து வீழ்ந்தார்! விரதியர் இருவ ரோடும்
ஆண்டுள குரங்கும் ஒன்றும் அமர்க்களத் தாரும் இன்னும்
மாண்டிலர்! இனிமற் றுண்டோ? இராவணன் வீர வாழ்க்கை.

புக்கு - புகுந்து. மீண்டிலர் - திரும்பினரில்லை. விளிந்து - செத்து. விரதியர் - தவசிகள். (இராமலக்குமணர்) ஆண்டு உ(ள்)ள - அங்கு' உள்ள; (அவர்களால்) ஆளப்பட்டுள்ள. அமர் - போர். இனி - இனிமேலும். மற்று - அசை. உண்டோ, இல்லையென்ற பொருள்குறித்தது. சிறப்புமிகுந்த விரதியர் இருவர்க்குரிய மாண்டிலர் என்ற வினையைச் சிறப்புக்குறைந்த குரங்கு ஒன்றும் ஏற்றது. அமர்க்களத்து இருவர் ஆரும் குரங்கு ஒன்றும் என இயைத்துப் பொருள்கொள்ளப்பட்டது காண்க.

† கந்தர்ப்ப ரியக்கர் சித்தர் அரக்கர்தங் கன்னி மார்கள்
சிந்தொக்கும் சொல்லி னுருன் தேவியர் திருவின் நல்லார்
வந்துற்‘றெங் கணவன் தன்னைக் காட்’டென்று மருங்கில் வீழ்ந்தால்
அந்தொக்க அரற்ற வோ! நான் கூற்றையும் ஆடல் கொண்டேன்.

கந்தர்ப்பர் - கந்தருவர். சிந்து - பண். திருவின் - திருவினைக்காட்டிலும் - இலக்குமியைக்காட்டிலும். நல்லார் - அழகுடையவர். மருங்கு - பக்கம். அந்து - அப்படி. ‘அந்துசெய்குவனென’(கம்பரா. இராவணன்வதை. 61. தமிழகாராதி.) ஒக்க - சமமாக. கூற்று - எமன். ஆடல் - வெற்றி.

இந்திரசம்பத்தைப் பெறும்படி, கோபத்தோடு (போர்செய்து,) வெற்றிபெற்று, எண்ணியது (எண்ணியபடி) முடித்து, நிலைபெற்றிருந்த யான், (நிலைகெட்டு) ஒரு பெண்பொருட்டாக (உண்டாகிய போரில் உன்னைச் சாகக்கொடுத்துக் காலக்கிரமத்தில்) நீ எனக்குச் செய்தற்குரிய (ஈமக்கடனையெல்லாம்) நான் உனக்குச் செய்வேனானேன்! உலகத்திலே என்னைக்காட்டிலும் (துர்ப்பாக்கியர்) யார் இருக்கின்றார்?*

## இந்திரசித்தின் உடலை இராவணன் இலங்கைக்குள்ளே கொண்டுபோகுதல்

மேற்கூறியவாறு இரங்கி ஏங்கிப் புலம்பிய இராவணன், இந்திரசித்தின் உடம்பை ஏந்திக்கொண்டு இலங்கைக்குள்ளே புகுந்தான். அந்தக் காட்சியைக்கண்ட நகரமாந்தர் புலம்பும் ஆரவாரம், பத்துத் திக்கிலும் பரவியது. அந்த நகரத்திலே, (தீவிர ராசபக்தியுடைய)

---

* சினத்தொடும் கொற்றம் முற்றி, இந்திரன் செல்வம் மேவ
நினைத்தது முடித்து நின்றேன் நேரிழை ஒருத்தி நீரால்
எனக்குநீ செய்யத் தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனக்குநான் செய்வ தானேன்! என்னின்யார் உலகத் துள்ளார்?

கொற்றம் - செயம். முற்றி - அடைந்து (தமிழகராதி). நேரிழை - நேர்மை இழை - நேர்மை (-நுண்மை) ஆன (வேலைப்பாடுடைய) ஆபரணம் (உடையவள் அல்லது அணிந்தவள்.) - சீதை. நீர் - தன்மை; இங்கே, பொருட்டு (- காரணமாக) என்றபொருள் தந்துநின்றது. கடன் - ஈமக்கடன்; ஈமக்கடன் அபரக்கிரியை, அந்தியக்கிரியை, உத்தரக்கிரியை, பிரேதகருமம்; சாச்சடங்கு என்பவை ஒருபொருள்குறித்தவை. பின்னிரண்டடிக்கருத்தை, இதே சந்தர்ப்பத்தில், வான்மீகியும் ஆண்டிருப்பதாகத் தெரிகிறது.

நடுவயசுக்குக் கீழ்ப்பட்டவருள்ளே வயசுகுறையக் குறையச் சாவதிகமும், நடுவயசுக்கு மேற்பட்டவருள்ளே வயசு அதிகமாக அதிகமாகச் சாவு மிகுதலும், வயசுமேற்பட்டவர் கீழ்ப்பட்டவரான இருவகையாரைக் காட்டிலும் நடுவயசினருள்ளே சாவுமிகக் குறைவாயிருத்தலும் இயல்பு. போர் புரிவோர், நடுவயசினரே. ஆதலால், மற்றச் சாதாரணகாலத்துக்குமாறாக, யுத்தகாலத்தில் நடுவயசினரே, அதிகமாகச் சாகுபவராவர். இந்த உண்மையை மனத்துட்கொண்டு ஓர் ஆங்கிலேயப்பிரமுகர் (Bright) செய்த ஒரு யுத்தத்தடைப்பிரசங்கத்தில், 'தந்தையர்க்கு மைந்தர்செய்தற்குரிய சாச்சடங்கை மைந்தர்க்குத் தந்தையர் செய்யச்செய்வது யுத்தம்' என்று கூறியதைப் பின்னிரண்டடி நினைவுகூரச்செய்கின்றது.

சில ஆடவர்கள், (தன் புடைவீரரைக் 'கண்ணனார், உயிரே அன்னார் கைப்படைக்கலத்திற் காப்பார்' (சுந்தர. பாசப்படலம் கஅ) என்று பாராட்டிய குமாரசக்கரவர்த்தி இறந்தபின் நாம் உயிரோடிருத்தல் கூடாதென்று துணிந்து),

கண்களைச் சூல்கின்றாரும் கழுத்தினைத் தடிகின்றாரும்
புண்கொளத் திறந்து மார்பின் ஈருளைப் போக்கு வாரும்
பண்கள்புக் கலம்பு நாவை உயிரொடு பறிக்கின்றாரும்

ஆயினர்.*

[சூலல் - தோண்டுதல். தடிதல் - வெட்டுதல். மார்பின் ஈருள் - நெஞ்சினுள்ளே உள்ள நுரையீரல். பண்கள் புக்கு அலம்பும் நா - இராகங்கள் புகுந்து ஒலிக்கும் நாக்கு.]

## இந்திரசித்தின் உடலுடன் இராவணன் அரண்மனையுள்ளே புகுதல்

இந்திரசித்தின்மனைவியர்கூட்டங்கள், சூழ்ந்து, துக்கத்தினால் சிரத்தின்மேற் செங்கைசேர்த்துச் சித்திரங்கள் கீழேவிழுந்து புரள்வதுபோலப் புரளாநிற்க, இராவணன், இந்திரசித்தின் உடலுடனே, அரண்மனைக்குள்ளே போனான். மண்டோதரி, துக்கத்தால் கால்களில் விழும்படி கூந்தலை அவிழ்த்துவிட்டு, இரண்டு கைகளாலும் மார்பில் அறைந்துகொண்டு (மகன் உடலை மலர்பரப்பிய மெத்தைமீதே கிடத்திய† இராவணன்முன்) வந்தாள்.

---

* 1904—5-ல் நிகழ்ந்த ரஷிய ஜப்பானிய யுத்தத்திலே, தமது அபார யுத்ததந்திரவித்தைவன்மையால் அபூர்வமான வெற்றிபெற்ற ஜப்பானிய கடற்படைத்தலைமைத்தலைவர் இட்டோ (Ito) என்பவர், தம் சக்கரவர்த்தி இறந்தபோது, தற்கொலைசெய்துகொண்டு தாமும் இறந்தது, அவருடைய அத்தியந்த ராசபக்தியை அகில உலகமும் அறியச்செய்தது. இந்தச் சரித்திரப்பிரபலமான உண்மைநிகழ்ச்சியை, இலங்காராச்சியத்துக் குமார சக்கரவர்த்தி (இந்திரசித்து) இறந்ததற்காக இராக்கதர் செய்த தற்கொலை, ஞாபகத்துக்குக் கொண்டுவருகின்றது.

† மலர்மெத்தையிற் கிடத்தியது, பின்வரும் 51-ஆம் பாட்டினால் தெரிந்தது.

தலைமேல்வைத்த கையினளாய்க் கனல்மேல்மிதித்தாற்போலப் பூமிமேல் மிதிக்குங் காலினளாய், ஏக்கம்நிரம்பிய நெஞ்சினளாய்க் கொலைவேடன் கூரியஅம்பால் உயிர்கொள்ள, மலைமேல் மயில் விழுந்தாற்போல, மைந்தன்மேல் விழுந்தாள்.* விழுந்தவள் மூச்சு விடவில்லை. பிரக்ஞையில்லை. உயிர் இருக்கிறதோ (இல்லையாயிற்றோ) என்னும்படி உடம்பை அசைத்தாளில்லை. ஒருசொல்லும் சொன்னாளில்லை. நெடுநேரமாக, விம்முதலோ வியர்த்தலோ எதுவும் செய்தாளில்லை. மெல்லமெல்ல(த் தன்னை மறந்திருந்த)மறதி நீங்கி, அரிதாகத் தெளிவுபிறக்கப்பெற்று, வாய்திறந்து புலம்பலுற்றாள்.†]

மண்டோதரி புலம்பல்

175 கலையினாற் றிங்கள் போல[1] வளர்கின்ற காலத் தேயுன்[2]
சிலையினால் அரியை வெல்லக் காண்பதோர் தவமுன் செய்தேன்[3]
தலையிலா வாக்கை காண வெத்தவஞ் செய்தே னந்தோ
நிலையிலா வாழ்வை யின்னு[4] நினைவனே நினைவி லாதேன்.

கொண்டுகூட்டு: '(நான்) திங்கள் கலையினால் (வளர்தல்) போல, (நீ) வளர்கின்றகாலத்தே, உன் சிலையினால் அரியை வெல்லக் காண்பதோர்தவம் முன்செய்தேன். (அந்த நானே) தலையிலா ஆக்கை காண எத்தவம் செய்தேன் அந்தோ! நினைவிலாதேன், நிலையிலா வாழ்வை இன்னும் நினைவனே?'

---

* தலையின்மேற் சுமந்த கையள் தழலின்மேல் மிதிக்கின் றாள்போல்
நிலையின்மேல் மிதிக்கும் தாளள் ஏக்கத்தால் நிறைந்த நெஞ்சள்
கொலையின்மேற் குறித்த வேடன் கூர்ங்கணை யுயிரைக் கொள்ள
மலையின்மேல் மயில்வீழ்ந் தென்ன மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்.

நிலை - பூமி (பிங்; தமிழகராதி.) கூர்ங்கணை - கூர்மையான அம்பு. மலை இந்திரசித்தின் உடலுக்கும் மயில் மண்டோதரிக்கும் உவமை.

† உயிர்த்திலள்! உணர்வும் இல்லள்! உயிரிலள் கொல்லோ? என்னப்
பெயர்த்திலள் யாக்கை! ஒன்றும் பேசலள்! விம்மி யாதும்
வியர்த்திலள் நெடிது நேரம்! விம்மினள் மெல்ல மெல்ல
அயர்த்திலள், அரிதில் தேறி, வாய்திறந் தாற்ற லுற்றாள்.

உயிர்த்திலள் - மூச்சுவிட்டாளில்லை. யாக்கைபெயர்த்திலள் - உடம்பை நிலைமாறச்செய்தாளில்லை. ஒன்றும், இங்கே ஒருவார்த்தையும் என்ற குறிப்புப்பொருள்கொள்ளநின்றது. அயர்த்திலள் - மறந்தாளில்லை (ஞாபகம் வந்தவள் ஆகி). மெல்ல மெல்ல அயர்த்திலள் (ஆகி) அரிதில் தேறி விம்மினள் என இயைத்திடுக.

பொருள்: 'சந்திரன், கலையுடன் (வளர்வது) போல, (நீ, அழகுடன்) வளர்ந்த இளம்பருவத்திலே, உன் வில்லினால் இந்திரனை வெல்லக்காண்பதற்கான புண்ணியத்தை முன் (சென்மத்தில்) செய்திருந்தேன். (அந்த நானே) உன்னுடைய தலையில்லாத உடலைக் காண்பதற்கு என்ன பாவத்தைச் செய்திருந்தேனோ? அந்தோ! (நிலையானதென்று நம்பியிருந்த உன்வாழ்வு நிலையாமல் நீங்கியதைக் கண்டு) நினைவு (செய்யும் வலிமை) நீங்கிய யான், நிலையாயிராத(தே, தன் இயற்கையாகவுள்ள) வாழ்வை (நிலையானதென்று முன் நினைந்ததுபோல்) இன்னும் நினைவேனோ? (நினைக்கவே செய்யேனெல், விரும்பேனென்பது சொல்லவேண்டியதில்லையென்றபடி.)'

திங்கள் - சந்திரன். சிலை - வில். அரி - இந்திரன். தவம் - புண்ணியம். ஆக்கை - உடல். தவம் எதிர்மறையிலக்கணையாகப் பாவத்தைக் குறித்தது. அந்தோ, இரக்கக்குறிப்புச்சொல்.

'நிலையில்லாத உடலுடன் வாழ்க்கையை விரும்பி மேற்கொள்வது, எனக்குத் தக்கதன்றென்றபடி. உயிர்விடுதலே தக்கது என்பது கருத்து' வை. மு. கோ.

பாடபேதம்: [1] என்ன. [2] காலத்தைய. [3] தவமுஞ் செய்தேன். [4] இன்னம்.

176 ஐயனே யழக னேயென் னரும்பெற லமிழ்தே[1] யாழிக்
கையனே மழுவ னேயென் றிவர்[2]வலி கடந்த கால[3]
மொய்யனே முளரி யன்ன நின்முகங் கண்டி லாதேன்
உய்வனோ வுலக மூன்றுக்[4] கொருவனே செருவ[5] லானே.

கொண்டுகூட்டு: 'செருவ(ல்)லானே! உலகம் மூன்றுக்கு ஒருவனே! ஆழிக்கையனே மழுவனே என்ற இவர்வலி கடந்த காலமொய்யனே! என் ஐயனே! அழகனே! அரும்பெறல் அமிழ்தே! முளரிஅன்ன நின்முகம் கண்டிலாதேன் உய்வனோ?'

பொருள்: 'போர்வல்லோனே! திரிலோகத்துக்கும் ஏகநாயகனே! சக்கரபாணியான திருமால், மழுவாளியான சிவபெருமான் என்ற இவர்களிருவர்களுடைய வலிமைக்கும் மேற்பட்ட வலிமையுடையவனே! என் ஐயனே! அழகனே! அரும்பெறலமிழ்தமே! தாமரைமலர்போன்ற உன்முகத்தைக் காணப்பெறாத யான், பிழைத்திருப்பேனோ?'

அரும்பெறல் அமிழ்தம் - பெறுதற்கரிய அமுதம். கடத்தல் - மேற்படுதல்; வெல்லல் (தமிழகராதி). ஆழி - சக்கராயுதம். காலம் - சமயம் (தமிழகராதி). மொய் - வலி. காலமொய்யன் - சமயத்துக்குத்தக்க(படி உதவும்) வலிமையுடையவன். தமிழகராதியில், 'சமயகவடன் - சமயத்துக்கேற்றபடி நடக்கும் வஞ்சகன்' என்றிருப்பது காண்க.

'காலன் + மொய்யன் = காலமொய்யன்–யமன்போல் வலியன்' என்று பொருள்கூறலும் உண்டு. சிவவிட்டுணுக்களின் வலிமையைக் கடந்த வலிமையுடையவனை, 'யமன்போல் வலியன்' என்ற பொருள், ஏற்கத்தகாததாயிருக்கின்றது. முன்னோர் இப்பொருள்கொண்டு, இதன் பொருந்தாமையை உணர்ந்து, 'காலமொய்யன்' என்பதைக் 'காலைமொய்யன்' எனத் திருத்தினர் போலும். முளரி அன்ன - தாமரை(மலர்)போன்ற. உய்தல் - சீவித்தல் - உயிர்வாழ்தல்.

இப்பாட்டில்வரும் எட்டு ஏகாரங்களில் நான்காவதும் ஐந்தாவதும் எண்ணேகாரங்கள்; மற்றவையெல்லாம் விளியேகாரங்கள்.

தலையற்ற உடலைநோக்கிப் புலம்புகின்றாளாதலால், உயிரோடுகூடிய உன் முழுத்திருமேனியையும் கண்டு களித்துக்கொண்டிருந்த நற்பாக்கியத்தை இழந்த நான், இறந்த உன்முகத்தைக் காணப்பெறாத துர்ப்பாக்கியமுடையேனானேனென்பாள், 'நின்முகம் கண்டிலாதேன்' என்றாள்:

பாடபேதம்: [1] மருங்தே. [2] என்றவர். [3] காலை. [4] மூன்றில். [5] சிலை.

177 தாளரிச் சதங்கை யார்க்கும் பருவத்தே தளிர்க்கை தன்னால்[1]
கோளரி யிரண்டு பற்றிக் கோணர்ந்தனை கோணர்ந்து[2] கோமுன்[3]
மூளுறப் பொருத்தி மாட முன்றிலின் முறையின் ஓடும்[4]
மீளரு விளையாட் டின்னங் காண்பனே[5] விதியி லாதேன்.

கொண்டுகூட்டு: 'தாள் அரிச் சதங்கை ஆர்க்கும் பருவத்தே, தளிர்க்கை தன்னால், இரண்டுகோளரி பற்றிக்கொணர்ந்தனை. கோமுன்கொணர்ந்து, மாடமுன்றிலினில் (கோபம்) மூளுறப்பொருத்தி, முறையின் ஓடும் மீளரு விளையாட்டு விதியி(ல்)லாதேன் இன்னம் காண்பனே!'

பொருள்: கால்களிலே சதங்கை ஒலிக்கும்(படி நடக்கும் பிள்ளைப்)பருவத்திலே, இரண்டு (குட்டிச்) சிங்கங்களை(க் காட்டுக்குப்போய்)ப் பிடித்துக்கொண்டுவந்தாய். (அவைகளை உன் தந்தையான) அரசன்முன்கொண்டுவந்து அரண்மனைமுற்றத்திலே (அவைகளுக்குக்) கோபம் மூளும்படி போர்மூட்டி (அவைகள் சண்டையிடுதலைப்பார்த்துக்கொண்டு, நீ,) ஓடி(விளையாடின) விளையாட்டை, நல்விதியில்லாத நான், இன்னம் காணப்பெறுவேனோ!

தாள் - கால். அரி - பரல் - பருக்கைக்கல் - சதங்கையின் உள்ளிடும் மணி. ஆர்த்தல் - ஒலித்தல். மூளுதல் - சினம் கிளம்புதல் (தமிழகராதி). கோளரி - கோள்அரி - வலிமை (உடைய) சிங்கம். கொணர்தல் - கொண்டு வருதல். பொருத்துதல் - போர்மூட்டுதல். 'வாரணம் பொருத்துவாரும்' (கம்பரா. நாட்டுப். 16. தமிழகராதி). முறையின் ஓடும் - (பிள்ளைகள் ஓடி விளையாடும்) முறையில் ஓடிய. மீளரும் - திரும்புதற்கரிய - திரும்பாத.

கழிந்த குழந்தைப்பருவம் திரும்பிவாராதாதலால் 'மீளரும் விளையாட்டு' என்றாள்.

இங்கே கூறப்பட்ட பிள்ளைவிளையாட்டு, சாகுந்தலநாடகத்தில், சகுந்தலையின்பாலன் ஒரு சிங்கக்குட்டியின்வாயைத் திறந்து பல்லெண்ணிய பால லீலையை நினைவுகூரச்செய்கின்றது.

பாடபேதம்: [1] ஆர்ப்பத் தவழ்கின்ற பருவந் தன்னில். [2] கொணர்ந்த. [3] கோபம். [4] முறையி னோடி. [5] காண்பனே.

178 அம்புலி யம்ம,[1] வாவென் றழைத்தலு மவிர்வெண் டிங்கள்
இம்பர்வந் தானை யஞ்ச லெனவிரு கரத்தி[2] னேந்தி[3]
வம்புறு மறுவைப் பற்றி முயலெனா வாங்கும் வண்ணம்[4]
எம்பெருங் களிறே காண வேசற்றே னெழுந்தி ராயோ.

நோண்டுகூட்டு: 'எம் பெருங்களிறே!, (நீ,) "அம்புலி வா" என்று அழைத்தலும், அவிர் வெண் திங்கள் இம்பர் வந்தானை "அஞ்சல்" என்று, இருகரத்தின் ஏந்தி, முயலெனா வம்பு உறும் மறுவைப்பற்றி வாங்கும்வண்ணம் காண, ஏசற்றேன்; எழுந்திராயோ !'

பொருள்: '(நீ குழந்தையாயிருந்தபோது, சந்திரனை இந்தக் குழந்தையோடு விளையாட) 'அம்புலீ வா' என்று (நான்கூற, நான் கூறியதைப் பின்பற்றி நீயும் அழைத்தாய்). அழைத்தவுடனே, சந்திரன் (இராவணேசுரன்குழந்தை அழைத்தபோது போகவில்லையானால், அனர்த்தம் விளைந்திடுமேயென்று அஞ்சி) வந்தவனைப் 'பயப்படாதே' என்றுசொல்லி, இரண்டுகைகளினாலும் ஏந்தி (அவனிடத்துள்ள மறுவை எல்லாரும் முயலென்றுசொல்லக் கேட்டிருந்த நீ அந்த) மறுவை முயலென்றுபற்றிப் பிடித்துக் கைக்கொள்ளமுயன்றவிதத்தைக் காண, ஆசைப்படுகின்றேன்!

'(காலத்திரை மூடிவிட்ட இந்த விசித்திர விளையாட்டுக்காட்சியை இன்னும் ஒருதரம் விளையாடிக்காட்ட')* எழுந்திருக்கமாட்டாயோ!

அம்ம, கேட்பாயாக எனப் பொருள்படும் ஓர் இடைச்சொல். அழைத்தலும் - அழைத்தவுடனே. அவிர்தல் - பிரகாசித்தல். திங்கள் - சந்திரன். இம்பர் - இவ்விடத்து. அஞ்சல் - அஞ்சாதே. வம்பு உறு - வீணாக(ப்பயனற்று) உள்ள. வாங்குதல் - கைக்கொள்ளல். வண்ணம் - வகை - விதம். ஏசறுதல் - ஆசைகொள்ளல்.

பாடபேதம்: [1] அம்மா. [2] நம்பவுன் றுதை யாணைக் கஞ்சினன் மருங்கு, நம்பவுன் றுதை யாணை மறுத்திடா மருங்கு. [3] நண்ண, நின்ற. [4] வாட்கை, வாழ்க்கை.

179 முக்கணன் முதலி னோரை யுலகோரு மூன்றி னேடும்[1]
புக்கபோ ரெல்லாம் வென்று நின்றவென்[2] புதல்வன் போலாம்
மக்களி லொருவன் கோல்ல மாள்பவன் வான[3] மேரு
உக்கிட வணுவோன் றோடி யுதைத்து போலு மம்மா.[4]

கொண்டுகூட்டு: உலகு ஒரு மூன்றினோடும் புக்கபோரெல்லாம், முக்கணன் முதலினோரை வென்றுநின்ற என்புதல்வன், மக்களில் ஒருவன் கொல்ல மாள்பவன்! (இது,) வானமேரு உக்கிட அணு ஒன்று ஓடி உதைத்தது போலும்.

பொருள்: மூன்றுலோகங்களிலும் மூண்டபோர்களிலெல்லாம் சிவபெருமான் முதலியோரைச் செயித்த என்மகன (அற்ப) மனிதரிலே (பலரன்று,) ஒருவன் கொல்ல மாண்டான்! (நம்பமுடியாத இந்தச்செயல்,) வானம் (அளாவிய மகா)மேரு (தூளாக) உதிரும்படி ஒரு (நுண்ணிய) அணு உதைத்ததுபோலும்!

முக்க(ண்)ணன் - சிவன். புகுதல் - தொடங்குதல்; நிகழ்தல் (தமிழகராதி). புதல்வன் - மகன். போல், ஆம் அசைச்சொற்கள். மக்கள் - மனிதர். உகுதல் - உதிர்தல். உக்கிட - (தூளாக) உதிர்ந்திட. அம்மா, அதிசயக் குறிப்புச்சொல்.

பாடபேதம்: [1] மூன்றினேடும். [2] நின்றவன். [3] மாள்வதே மான, வாழ்வதேவான. [4] உக்குமென் காலால் வேரோ டொடிதலு முளதே யம்மா, உக்குமென் காலால் வேரோ டொடித்தலு முளதே யம்மா, உக்கமென் காலால் வேரோ டொடிவது முளதே யம்மா.

---

* இந்தத் தடித்த எழுத்திலுள்ள உரைப்பகுதி, பி. ஸ்ரீ. ஆச்சாரியர் இயற்றிய கம்பசித்திரத்திலுள்ளது.

180 பஞ்சேரி[1] யுற்ற தேன்ன வரக்கர்தம் பரவை யெல்லாம்
வேஞ்சின மனிதர்[2] கோல்ல விளிந்ததே[3] மீண்ட தில்லை
அஞ்சினே னஞ்சி னே[4]னச்[5] சீதையேன் றமிழ்தாற் சேய்த[6]
நஞ்சினா லிலங்கை வேந்த னாளையித் தகைய னன்றே.[7]

கொண்டுகூட்டு: வெஞ்சின மனிதர் கொல்ல அரக்கர்தம்பரவை யெல்லாம், பஞ்சு எரி உற்றதென்ன, விளிந்ததே! மீண்டதில்லை! அஞ்சினேன், அஞ்சினேன்; நாளை, அச்சீதையென்ற அமிழ்தாற்செய்த நஞ்சினால், இலங்கைவேந்தன், இத்தகையன் அன்றோ!

பொருள்: (இதுவரை இந்திரசித்தை முன்னிலையாக்கிப் புலம்பிய மண்டோதரி, தான் புலம்புவதை இராவணன் கேட்டுக் கொண்டுநிற்பதை உணராமல், தனக்குத் தான் கூறுவாளாய் 'இந்திரசித்தைக் கொன்ற மனிதர்க்கு ஏனைய இராக்கதர் எம் மாத்திரம்! அந்த அற்ப) மனிதர் கொல்ல இராக்கத (சேனா) சமுத்திரம், பஞ்சு தீப்பற்றப்பட்டாற்போல மாண்டது. (போர்க் களத்துக்குப்போன அந்தச் சேனையில், ஒரு சிறுபகுதியும்) திரும்பி வரவில்லை! (இந்தக் கேடுகளெல்லாம் சீதையால் விளைந்தன. இன்னும் அவளால் என்னென்ன தீங்குகள் நேர இருக்கின்றனவோ! என்று) அஞ்சுகின்றேன்! (மிகவும்) அஞ்சுகின்றேன்!! (சீதை காரணமாக, இன்று என் மகன் இறந்தான்.) நாளைக்கு, அந்தச் சீதையென்ற பெயருடைய அமிழ்தினாற் செய்யப்பட்ட நஞ்சினால், இலங்கைவேந்தன், என் மகன் தன்மையனாவானன்றோ!

எரி - தீ. பரவை - சமுத்திரம். வெம் சினம் - கொடுங்கோபம். ஏ, இரக்கக்குறிப்பு. மீண்டது - திரும்பினது. இத்தகையன் - இத்தத்தன்மை (- என் மகன் தன்மை - இறந்த தன்மை) உடையவன்.

சீதை இயல்பாக அமிழ்தம்போல நன்மைபயப்பவளென்றும் அவளை அறமுறைதவறி விரும்பிய இராவணனுக்குக் கேடுபயப்பவளானாளென்றுங் கருதி, 'அமிழ்தினாற்செய்த நஞ்சு' என்றாள்.

மண்டோதரி, இறந்த மகனை இறந்தானென்று (174-ஆம் பாட்டில்) கூறினாளாயினும், உயிரோடிருக்கும் கணவனை இறப்பான் என்று வெளிப்படையாக வாய்விட்டுக் கூறமாட்டாதவளாய், 'இத்தகையன்' என்று குறிப்பாகக் கூறியது நயமாயும் இயல்பாயுமிருத்தல் கவனிக்கத்தக்கது.

பாடபேதம்: 1 மஞ்சரி. 2 மனிதன். 3 விளிந்தவர். 4 நடுங்கினேன். 5 இச். 6 அமிழ்திற் றோய்ந்த. 7 வேந்து நாளையித் தகைய னன்றோ, வேந்து நாளையித் தகைய தன்றோ.

## இராவணன் சீதையை வெட்ட ஓடுதல்

[ (மகன் சாவினால் இயல்பாக உண்டாகியிருந்த பெருந்துன்பம் மண்டோதரிபுலம்பலைக் கேட்டு, அதிகப்பட்டுக்கொண்டிருந்த) இராவணன், அவள், 'இன்று மகனுக்குநேர்ந்த கதி நாளை இலங்கை வேந்தனுக்கும் நேர்ந்துவிடுமே' என்று அலறியதைக் கேட்ட வுடனே, சீதையாலன்றோ நம்மவர்களுக்கெல்லாம் இத்தனை துன்பங்களும் உண்டாயினவென்று கோபவெறிகொண்டு, 'அவளை வாளால் வெட்டிக் கொன்றிடுவே'னென்று சொல்லி, அவளிருந்த திசையைநோக்கி ஓடலானான். ]

## மகோதரன் தடுத்தல்

181 ஓடுகின்றானை நோக்கி உயர்பெரும் பழியின்[1] உச்சி
சூடுகின் றானென் றஞ்சி மகோதரன் றுணிந்த நெஞ்சன்
மாடுசென் றடியின் வீழ்ந்து வணங்கிநின் புகழ்க்கு மன்ன
கேடுவந் தடுத்த தென்னா[2] இனையன கிளத்த[3] லுற்றான்.

கொண்டுகூட்டு: மகோதரன், ஓடுகின்றானை நோக்கி, உயர்பெரும் பழியின் உச்சி(யைச்) சூடுகின்றானென்று அஞ்சி, துணிந்த நெஞ்சன் மாடு சென்று அடியில் வீழ்ந்து வணங்கி, 'மன்ன! நின் புகழ்க்குக் கேடு அடுத்து வந்தது' என்னா, இனையன கிளத்தலுற்றான்.

பொருள்: மகோதரன், ஓடுகின்ற இராவணனைக்கண்டு, இவன் அத்தியந்தம் நிந்தைக்காளாகின்றானென்று அஞ்சி(ச் சீதையைக் கொல்ல)த் துணிந்த நெஞ்சினனான இராவணனருகே சென்று அடியில் விழுந்து வணங்கி, 'அரசனே, உன் புகழ்க்குக் கேடு வந்தது' என்று பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

உயர்பெரும் பழியினுச்சி சூடுகின்றான் - உயர்ந்த பெரிய பழிகளிலே உச்சியான (தனக்கு உயர்ந்ததில்லாத) பழி(யைத் தலைமேற்) சூடுகின்றான். மாடு - பக்கம், இடம். இனையன - இத்தன்மையானவை. கிளத்தல் - சொல்லுதல்.

'துணிந்த நெஞ்சினன் மாடுசென்று', என்பதற்குத் தூதர் இந்திரசித்தின்மரணத்தைத் தெரிவிப்பாராய், 'இல்லை ஆயினன், உன் மகன், இன்று' எனச் சொல்லினாரை வெட்டிவிட்ட இராவணன்முன்பு, அவன் கொடுங் கோபங்கொண்டவனும் வாளும் கையுமாயிருக்கும் இந்தச் சமயத்திற் சென்று

அவன்கருத்துக்கு மாறானதைக் கூறினல், கொன்றிடுவானென்று அஞ்சாத நெஞ்சுத்துணிவுடையவனய் (மகோதரன், 'இராவணனன்) பக்கம்போய்' என்றும் பொருள்கொள்ளலாம்.

முதலில் எதைச்சொன்னல், இராவணன், தன்னை வெட்டலைத் திட்டமாக விட்டுவிடுவானென்று ஆலோசித்து, அவன் உற்றார் உறவினர் உடல் பொருள் ஆவியினும் உயர்ந்ததாகக் கருதியுள்ள 'புகழ்க்குக்கேடு அடுத்து வந்தது' என்று தொடங்குகின்றான்.

'இந்திரசித்தை லட்சுமணன் கொல்லப்போகிறான்' என்றும், 'நாய் அவனுடலை நக்கத் தகப்பன் கதறப்போகிறா'னென்றும், சீதை ஆவேசங்கொண்டவளைப்போலப் பேசியபோது, இராவணன் அவளைக் கொல்ல ஓடினன். அப்போது புத்திரவாஞ்சை சீதையின் மேலுள்ள ஆசையையும் வென்றுவிட்டது. அந்தச்சமயத்தில் இராவணனைத்தடுத்தவனும் மகோதரனே.......................... ......................'இந்திரசித்துக் கொல்லப்படுவான்' என்று சீதை சொன்னதையே பொறுக்கமுடியாத இராவணன், அவன் கொல்லப்பட்டதும், அந்தத்துயரம் சீதைநிமித்தமாகத்தானே ஏற்பட்டதென்று கொதித்துக் கல்நெஞ்சுள்ள இந்த வஞ்சகியைக் கொன்று வஞ்சந்தீர்வேன்' என்று ஓடத்தொடங்கியதில் ஆச்சரியமில்லை. இது இராவணன் குணநிசயத்துக்குப் பொருத்தமானதுதான். ஆனல், இந்தநிலையிலும் மகோதரன் தடுக்கிறானென்றால், அது, ஓர் ஆச்சரியமல்லவா?' கம்பசித்திரம்.

பாடபேதம்: [1] பழியே, பழியை. [2] உறுவதென்ன, உற்றதென்றே, [3] இளக்கல்.

182 நீருள தனையுஞ் சூழ்ந்த நெருப்புள தனையு நீண்ட[1]
பாருள தனையும் வானப்[2] பரப்புள தனையுங் காலின்
பேருள தனையும் போப்[3] பெரும்பழி பிடித்தி போலாம்
போருள தனையும் வென்று புகழுள தனையு முள்ளாய்.[4]

கொண்டுகூட்டு: 'போர் உளதனையும் வென்று, புகழ் உளதனையும் உள்ளாய்! நீர் உளதனையும் சூழ்ந்த நெருப்பு உளதனையும், நீண்ட பார் உளதனையும், வானப்பரப்பு உளதனையும் காலின்பேருளதனையும் போப் பெரும் பழி பிடித்திபோலாம்!'

பொருள்: 'எத்தனைபோர்கள் உண்டாயினவோ, அத்தனை போர்களிலும் வெற்றிபெற்று (அந்த வெற்றியினால் உண்டாகிய) புகழ் எவ்வளவுகாலம் நிலைத்திருக்குமோ, அவ்வளவுகாலமும் நிலைத்திருக்கப்பெற்றேனே; ஐம்பெரும்பூதங்கள் உள்ளவரையும் அழியாத பெரும்பழியைக் கைக்கொள்ளப்போகின்றாய்போலும்!'

தனையும் - அளவும். பார் - பூமி. கால் - காற்று. பேரா - அழியாத.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாயமென்றும் நிலம் நீர் தீ வளி (-காற்று) வெளி (-ஆகாயம்) என்றும் கூறப்பட்ட பஞ்சபூதங்கள் இக்கவியில் வந்திருக்கின்றன.

இதன்முன் குறிப்பிடப்பட்ட புகழின்பெருமை, அப்புகழ், பஞ்சமகா பூதங்களுள்ளவரை அழியாததென்று இக்கவியில் விதந்துகூறப்பட்டது.

உன்னுடைய மறுவற்ற நிட்களங்கக்கீர்த்திச் சந்திரனைச் சீதைவத மறுவுற்ற சகளங்க அபகீர்த்திச் சந்திரனுக்கிவிடாதிருப்பாயாக, உன்னுடைய வெற்றிப்புகழமுதத்தோடு, சீதைவத விடத்தைச் சேர்த்துவிடாதிருப்பாயாக என்ற கருத்துப்பட மகோதரன் இராவணனைநோக்கிக் கூறினனென்று இந்தப்பாட்டின் கருத்தை விரித்துரைக்கலாம். (புகழும் புண்ணியமும் வெண்ணிறமுடையனவென்பதும் பழியும் பாவமும் கருநிறமுடையனவென்பதும் கவிமரபு. அமிழ்தமும் விடமும், முறையே, வெண்ணிறம் கருநிறமுடையவை என்பது கூறவேண்டியதில்லை.

பாடபேதம்: [1] நீண்ட நெருப்புள தனையுஞ் சூழ்ந்த. [2] காயப்பரப்புள, காயப்பரப்பின. [3] மாயாய். [4] உள்ளால்.

183 தெள்ளருங் கால கேயர் சிரத்தொடுந் திசைக்கை[1] யானை
வெள்ளிய மருப்புச் சிந்த வீசிய விசய வொள்வாள்[2]
வள்ளிய மருங்குற் செவ்வாய் மாதர்மேல் வைத்த போது
கொள்ளுமே யாவி தானே[3] நாணத்தாற் குறைவ தல்லால்.

கொண்டுகூட்டு: 'தெள்ளரும் காலகேயர் சிரத்தொடும் திசைக்கை யானை வெள்ளிய மருப்புச் சிந்த வீசிய விசய ஒள்வாள், வள்ளியமருங்குற் செவ்வாய் மாதர்மேல் வைத்தபோது, தானே நாணத்தால் குறைவதல்லால் ஆவிகொள்ளுமே!'

பொருள்: '(நீ கையில் பிடித்திருக்கின்ற இந்த வாள், முன் காலத்திலே, நீ,) காலகேயர் தலைகளும் திசையானைக் கொம்புகளும் அற்றுவிழும்படி வீசிய வெற்றிவாள் ஆகும். அப்படிப்பட்ட வாளை,

நீ,) ஒருபெண்மேல் வைத்தபோது, (அது, வீரரைவெட்டுதற்குரிய நாம் ஒரு பெண்ணை வெட்டும்படி பிரயோகிக்கப்படுகின்றோமேயென்ற) வெட்க(மாகிய *கட்க)த்தினால் தானே வெட்டப்படுமே (வெட்டப்பட்டாற்போல வருந்துமே)யன்றி, (அந்தப் பெண்ணை வெட்டி அவள்) ஆவியைக்கொள்ளாது. (நீ ஒருபெண்ணை வெட்டத்தொடங்கினாயென்ற பழியை அடைவாயேயல்லாமல் தெய்வவாளான உன்வாள் பெண்ணைவெட்டும் பழிச்செயலைச் செய்யாது' என்றவாறு.)

தெள் அரும் காலகேயர் - தெரிதற்கரிய (வீரமுடைய) காலகேயர். சிரம் - தலை. வெள்ளிய - வெண்ணிறமுடைய. மருப்பு - கொம்பு. விசயம் - வெற்றி. ஒள் - ஒள்ளிய - பிரகாசமான. வள்ளி அம் மருங்குல் - கொடி (போலும்) அழகிய இடை. மாதர் - பெண்; இங்கே பெண்களல்ல. மாதர் ஒருமையிலும் வருதல் இப்பாட்டிலும் 'மாதர்தன் வனப்புநோக்கி' என்ற சிந்தாமணிப்பாட்டிலும் காண்க.

குறைதல் - வெட்டப்படுதல். 'கையுறிற் கால்குறையும்' (நாலடி. 84. தமிழகராதி.) 'குறைவதல்லால்' என்பதற்குக் குன்றிப்போவதல்லாம லென்றும் பொருள் கூறலாம். கொள்ளுமேயென்பதில், ஏகாரம் எதிர்மறை.

பாடபேதம்: [1] திசைக்கண். [2] விசயத்தொள்வாள். [3] கொள்ளுமோ தானல் லாவி.

184 மங்கையர்[1] குலத்து ளாளைத் தவத்தியை முனிந்து வாளால்[2]
சங்கையொன் றின்றிக் கொன்றற்[3] குலத்துக்கே தக்கா னென்று
கங்கையஞ் சென்னி யானும் கண்ணனும் கமலத் தோனும்
செங்கையுங் கொட்டி யுன்னைச் சிரிப்பராற் சிறிய னென்னு[4].

கொண்டுகூட்டு: 'மங்கையர்குலத்துளாளைத் தவத்தியைச் சங்கை ஒன்று(ம்) இன்றி முனிந்து வாளால் கொன்றால், 'குலத்துக்கே தக்கான்' என்று, சிறியன் என்னாக் கங்கையஞ்சென்னியானும் கண்ணனும் கமலத்தோனும் உன்னைச் செங்கைகொட்டிச் சிரிப்பர்.

பொருள்: '(பெண்களைக் கொல்வது பாதகம்; அதிலும் தவத்தைமேற்கொண்ட பெண்ணைக் கொல்வது அதிபாதகம். அவ்வாறாகப்) பெண்களினத்தைச் சேர்ந்தவளும் தவசியுமான சீதையைக்

* கட்கம் - வாள்,

கூச்சமில்லாமல் (பெண்கொலை நாணத்தக்கதென்ற கூச்சம் சிறிது மில்லாமல்) கொன்றுயானல், (தான் பிறந்த கொடிய) ராட்சச சாதிக்குத் தக்க(செய்கையைச் செய்த)வனென்றும், "கடைப் பட்டவன்" என்றும் சொல்லிச் சிவனும் திருமாலும் பிரமனும் உன்னை (இகழ்ந்து) கைகொட்டிச் சிரிப்பார்கள்.'

முனிந்து - கோபித்து. சங்கை - சந்தேகம்; கூச்சம். ஒன்று - சிறிதும். கங்கையஞ்சென்னியான் - சிவன். கண்ணன் - விட்டுணு. கமலத்தோன் - பிரமன். சிறியன் - அற்பன் - கடையானவன். 'செங்கையும்' என்பதில், உம்மை இசைநிறை.

பாடபேதம்; [1] மங்கையைக். [2] வாளிற். [3] கொன்றுன். [4] சிறியை யென்று.

185 நிலத்தியல் பன்று வானி னெறியன்று புறத்தி னின்ற[1]
தலத்தியல் பன்று மேலோர் தருமமே[2] லதுவு மன்று[3]
புலத்தியன் மரபின் வந்து[4] புண்ணிய விரதம்[5] பூண்டாய்[6]
வலத்தியல்[7] பன்று மாயாப்[8] பழிகோண்டு[9] மறுகு வாயோ.

கோண்டுகூட்டு: 'புலத்தியன்மரபில் வந்து புண்ணியவிரதம் பூண்டாய், (பெண்கொலை) நிலத்தியல்பு அன்று; வானின் நெறி அன்று; புறத்தில் நின்ற தலத்து இயல்பு அன்று; மேலோர் தருமமேல், அதுவும் அன்று; வலத்து இயல்பு அன்று. மாயாப்பழிகொண்டு மறுகுவாயோ.'

போருள்: 'புலத்தியன்குலத்தில் உதித்து, நற்கருமமான தவத்தை மேற்கொண்டோனே! (பெண்கொலை,) பூலோகத்தாருடைய இயல்பன்று; வானுலகத்தாருடைய இயல்பன்று; (இவ்விரண்டுலகங்களுக்கும்) புறம்பான (சத்தியலோக முதலிய) வேறு லோகத்தாரின் இயல்பன்று; மேலோர் தருமமென்றுலோ, அதுவுமன்று; உன் வெற்றிக்கு விரோதமானது. (இவ்வாறாக யாருஞ் செய்யத்தகாத பெண்கொலையைச் செய்து, என்றும் அழியாத பழியை மேற்கொண்டு வருந்துவாயோ!'

நிலம் வான் தலம் என்பவை, ஆகுபெயராய் அவைகளில் வாழ்வோரைக் குறித்தன. மரபு - வமிசம் - குலம். புண்ணியம் - நற்கருமம். விரதம் - தவம் (தமிழகராதி). வலம் - வெற்றி.

விரதம் (- தவம்) பூண்டோய் என்பதில் தவம் இராவணன் சிவனையும் பிரமனையும் நோக்கிச் செய்த தவங்களைக் குறித்தது.

பாடபேதம்: [1] நீதியன்று. [2] கருமமேல். [3] அன்று தக்க. [4] வந்த. [5] மரபு. [6] பூண்டார். [7] பலத்து. [8] மாயப். [9] பழிகொள.

186 இன்றுநீ யிவளை வாளா லெறிந்துபோ[1] யிராமன்[2] றன்னை
வென்றுமீண்[3] டிலங்கை மூதூ ரெய்தினை வேதும்பு வாயோ[4]
பொன்றினள் சீதை யென்றே[5] போவர்க ளவர்தா மல்லால்
வென்றிட முடியா தென்னும் வீரமோ விளம்ப லென்றான்.[6]

கொண்டுகூட்டு: 'இன்று, நீ, இவளை வாளால் எறிந்துபோய், இராமன் தன்னை வென்று மீண்டு, இலங்கைமூதூர் எய்தினை வெதும்புவாயோ? சீதை பொன்றினள் என்று அவர்கள்தாம் போவார்கள். அல்லால் வென்றிட முடியாதென்னும் வீரமோ? விளம்பல்' என்றான்.

பொருள்: (சீதையைக் கொல்லாமல், எதிரிகளைக் கொன்றாயானால், நீ விரும்பிய அவளை அடைவாய்.) இன்று சீதையை வாளால் வெட்டிவிட்டுப் (போர்க்களத்துக்குப்)போய் இராமனை(க் கொன்று) வென்று திரும்பி இலங்கையை அடைந்து (விரும்பிய சீதையை இழந்ததனால்) மனம் புழுங்குவாயோ? (நீ அறிவாளியாதலால், இவ்வாறு, முன்செய்தது தவறு என்று பின்வருந்தும்படியான காரியத்தைச் செய்யமாட்டாய். ஆதலால், நீ சீதையைக் கொல்லுதற்கு முன்யோசனையோடுகூடிய காரணம் இருக்கவேண்டும். அந்தக்காரணம்,) எதிரிகள், 'சீதை இறந்தாள், (இராவணன் அவளைக் கவர்ந்த அக்கிரமத்துக்கு அவன்மக்கள் தம்பி முதலிய பலரைக் கொன்று, தக்க தண்டனை செய்து, நம் வீரத்தைக் காப்பாற்றிக்கொண்டோம்; இனி, இராவணனைக் கொல்வதினும் உயிரோடிருந்து அவன் எல்லாரையும் இழந்த துன்பத்திலழுந்தி வருந்திக்கொண்டிருக்கவிடுதல் சிறந்த தெண்டனை)' என்று அவர்கள் (இலங்கையைவிட்டுப்) போய்விடுவார்கள் (ஆதலால் சீதையைக் கொல்வதே தக்க யோசனை. இந்த யோசனைப்படிசெய்தால்) அல்லாமல் (எதிரிகளை) வென்றிடமுடியாதென்னும் கோழைத்தனமோ? (வேறெதுவோ?) கூறுவாயாக.

எறிதல் - வெட்டுதல். மீண்டு - திரும்பி. எய்துதல் - அடைதல். பொன்றுதல் - சாதல். அல்லால் - அல்லாமல். வீரம் எதிர்மறையிலக்கணையாகக் கோழைத்தனத்தைக் குறித்தது. விளம்பல் - சொல்லுக.

'அல்' என்ற வியங்கோள்விகுதி, பெரும்பான்மையாக எதிர்மறைப் பொருளிலும், சிறுபான்மையாக உடன்பாட்டுப்பொருளிலும் வரும்; இங்கே, 'விளம்பல்' என்பதில் உடன்பாட்டுப்பொருளில் வந்தது.

கோபாவேசனுய்ச் சீதையைக் கொல்ல ஓடிய இராவணனைத் தடுத்தற்குத் தொடக்கத்தில், 'உன் புகழ்க்குக் கேடு அடுத்தது' என்று கூறி, அவனை ஓடாது நிற்கச்செய்தலில் சித்திபெற்ற மகோதரன், படிப்படியாக ஒன்றுக்குப்பின் ஒன்று அதிகமாக மானஉணர்ச்சியைக் கிளர்ந்தோங்கச்செய்யத்தக்க நியாயங்களை அடுக்கிக் கூறி, முடிவில், சுவர்க்கத்தையிழத்தலோடுபோகாமல் நரகத்தையடைதல்போல, உயர்வொப்பற்ற புகழ் போய்விடுதலோடு, வீரனுக்கு எந்தப் பழி எல்லாப்பழிகளினும் இழிவானதோ, அந்தக் கோழையென மதிக்கப்படும் பழியை அடையும்படி நேருமென்று, இராவணன் நெஞ்சில் மற்றெல்லா நியாயங்களினும் அழுத்தமாகத் தைத்துச்சீதையைக்கொல்லும் கருத்தை முழுதும் விட்டுக் கையில்வைத்திருந்த வாளைப் பூமியில் வைத்துவிடச் செய்யும் வன்மையுடைய நியாயத்தைக் (கடைசியாகக்) கூறியிருத்தல், ஊன்றிநோக்கி உவத்தற்குரியது.

பாடபேதம்: [1] எறிந்தனை. [2] மனிதன். [3] பின்பு. [4] விளம்புவாயோ. [5] இன்று, என்று. [6] புரவல புதல்வன்றன்னைக் கொன்றவர் தம்மைக் கொல்லக் கூசினை போலு மென்றான், புரவல......சால வென்றான், புரவல .................கூசினை கொள்க வென்றான்.

## சீதையை வெட்டுவதைவிட்டு, இந்திரசித்தின் உடலை எண்ணெய்த்தோணியிலிடும்படி இராவணன் கட்டளையிடுதல்

[ மேற்கூறியவாறு மகோதரன்கூறியதைக் கேட்ட இராவணன், கையிலிருந்த வாளைத் தரையில்வைத்துவிட்டு, 'என் மகன்தலையையும், அதனைக்கொண்ட பகைவர்தலைகளையும் கொண்டாலன்றித் திரும்பிவரேன்' என்று சொல்லி, இந்திரசித்தினுடலை எண்ணெய்த் தோணியிலிடும்படி கட்டளையிட்டான். ]

இராவணன்சோகப்படலம் முற்றிற்று

[தொடரும்]

---

ஸ்ரீ:

தா(ധா)ராநகரவேந்தன் போஜதேவன் இயற்றிய

# ஸரஸ்வதீகண்டாபரணம்

## (கலைமகள்கழுத்தணி)

[ஸ்ரீ. V. S. ராமஸ்வாமிசாஸ்திரியாரவர்கள், B.A., B.L.]

௩௯௪-ஆம் பக்கத் தொடர்ச்சி.

### 10. ஹீநோபமம்

𑌹𑍀𑌨𑌂 𑌯𑌤𑍍𑌰𑌾𑌵𑌰𑍋 𑌨𑌾𑌮 𑌸𑍍𑌯𑌾𑌦𑍁𑌪𑌮𑍇𑌯𑌂 𑌗𑍁𑌣𑌾𑌧𑌿𑌕𑌮𑍍 ।
𑌹𑍀𑌨𑍋𑌪𑌮𑌂 𑌤𑌦𑌸𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌕𑌵𑌯𑌃 𑌕𑌾𑌵𑍍𑌯𑌕𑍋𑌵𑌿𑌦𑌾𑌃 ॥கசஎ॥

உவமானம் குணங்களாற் குறைந்ததாயும் உவமேயம் குணங்களால் மேம்பட்டதாயும் இருந்தால் அது ஹீநோபமம் எனப்படும். அது சில இடங்களிற் குற்றமாகாது குணமாமென்பர் புலவர்.

உதாரணம்:—

𑌤𑌤𑌃 𑌕𑍁𑌮𑍁𑌦𑌨𑌾𑌥𑍇𑌨 𑌕𑌾𑌮𑌿𑌨𑍀𑌗𑌣𑍍𑌡𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌨𑌾 ।
𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑍇𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌣 𑌮𑌾𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍀 𑌦𑌿𑌗𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌾 ॥

காமங்கொண்ட பெண்களின் கபோலம்போல் வெண்மைநிறமுள்ளவனும் கண்களுக்கு இன்பத்தைச்செய்பவனும் குமுதநாதனுமான சந்திரனால் கீழ்த்திசை அலங்கரிக்கப்பட்டுள்ளது.

இங்கே உவமானமாகக் காட்டப்பட்டுள்ள மடந்தையின்முகம் சந்திரனாகிய உவமேயத்தினும் மிகக் குணக்குறைவுடையதாயினும், இவ்வுவமை, காதல்மிகுதிக்குக் காரணமாதலால், இது குற்றமாகாது, குணமேயாம்.

## 11. அதிகோபமம்

யத்ரோபமாநமுத்க்ருஷ்டமுபமேயம் நிக்ருஷ்யதே ।
ஜ்ஞேயம் தததிகௌபம்யதோஷோபி க்வாப்யதோஷதா ॥ ௧௪௮ ॥

எவ்விடத்தில் உவமானம் உயர்ந்ததாயும் உவமேயம் தாழ்ந்த தாயும் உள்ளதோ அங்கே அதிகோபமம் என்னும் குற்றமுளதாம். அது சில இடத்துக் குற்றமாகாது, குணமாம்.

உதாரணம்:—

காந்த்யா சந்த்ரமஸம் தாம்நா ஸூர்யம் தைர்யேண சார்ணவம் ।
ராஜந்நநுகரோஷி த்வம் ஸௌந்தர்யேணாபி மந்மதம் ॥

வேந்தே! நீ ஒளியால் சந்திரனையும் தேஜஸ்ஸினல் சூரியனையும் தைரியத்தால் சமுத்திரத்தையும் அழகினுல் மன்மதனையும் ஒத்திருக்கின்ருய்.

இங்கே உவமானங்கள் உவமேயத்தினும் உயர்ந்தவையாயிருப்பினும், அரசன் உலகபாலருருவாய்நின்று உலகங்காப்பவனுதலால், அவனுக்கு அத்தகைய உவமைகளைத் தந்துரைப்பது, குற்றமெனப்படாது, குணமெனவேபடும்.

## 12. அசதிருசோபமம்

உபமாநஸ்ய வைஷம்யாத் வைஷம்யோபமம் ।
தஸ்யாஸ்யாநுஜ்ஞாதிஷ்டதி வ்யதிரேகோபமாதிஷு ॥ ௧௪௯ ॥

உவமானப்பொருள் உவமேயப்பொருளுடன் ஒத்திராவிடின், அது அசதிருசோபமம் என்னும் குற்றமாம். ஆயினும், அதனை வெதிரேகோபமை முதலியவற்றின்கண் குற்றமின்றிக் குணமாமெனக்கொள்வர் புலவர்.

உதாரணம்:—

ப்ரஹிதஃ ப்ரயநாய மயா நஹாமோ காரயிதும் மஹீமஹஜா ।
நவரேஷுமஹௌஜஸஶ்சாதிவகுமவசிஞ்சி மஹீஷ்டுமவாஜவ ॥

யாதவர்களைப் போருக்கழைப்பதற்கு எம் அரசனுல் நான் ஏவப்பட்டுள்ளேன். ஏனென்ருல், சிறந்த வீரர்கள் தம் பகைவர் மாட்டுத் திருடரைப்போல வஞ்சனைவகையால் தீங்கிழைக்கமாட்டார்களன்ரே!

இங்கே வீரர்களுக்கும், உபமானமாகக்காட்டப்பட்ட திருடர்களுக்கும் ஒப்புமையிலதாயினும், இது, வெதிரேகவுவமையாதலால் இங்கே அசதிருசோபமம் என்னும் குற்றமின்றிக் குணமாயிற்று.

## 13. அப்பிரசித்தோபமம்

யஸ்யோபமாநம் லோகேஷு ந ப்ரஸித்தம் ததிஷ்யதே ।
அப்ரஸித்தோபமம் நாம தத்விதைர்நவ து⁴ஷ்யதி ॥ ௧௫௦ ॥

எப்பொருளுக்குக் காட்டப்படும் உவமானம் உலகத்தில் பிரஸித்தமாயில்லையோ அப்பொருள், அப்பிரஸித்தோபமம் (-பிரஸித்தியற்ற உவமானத்தையுடையது) என்னும் குற்றமுளதாம். ஆயினும், சில இடங்களில் அவ்வாறு கூறுதல், குற்றமாகாது, குணமாம்.

உதாரணம்:—

உத்ருத்ய ஹரிணாங்கிணீ ஸ்தநாவஸ்த்ரம்
ஹாஸ்யாந்நந்தஸ்ய நிர்வேஷ்டிதம் ஹிமாம்ஶோ: ।
பிம்பம் கஷாயபிஸகாண்டகஷாயமேதத்
விஷ்ணோ: பதம் ப்ரயதமேக கஷாயயந்தி ॥

காதலன் கசக்குதலாற் சிறிது நசுங்கியதும் உயர்ந்ததுமான கருப்பங்கொண்ட யவனமடந்தையின் தனத்தையொத்த சந்திரபிம்பமானது, முற்றிய தாமரைத்தண்டைப்போலச்சற்றுச்சிவந்தும் வெளுத்துமுள்ள முந்திய கிரணங்களால் விஷ்ணுபதம் எனப்படும் ஆகாயத்தை விளக்குகின்றது.

இங்கே சந்திரபிம்பத்துக்குக் கூறிய உவமை வேறோரிடத்தும் அதற்குக் கூறப்பட்டிலதாதலால் அப்பிரஸித்தோபமம் என்னும் குற்றம் தங்குதற் கேற்பினும், அவ்வுவமை சிருங்காரச்சுவையை மிகுவிப்பதாயிருத்தலால் இவ்விடத்துக் குற்றமெனப்படாது, குணமேயாம்.

### 14. நிரலங்காரம்

𑌨𑌿𑌰𑌲𑌂𑌕𑌾𑌰𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑌲𑌂𑌕𑌾𑌰𑍋𑌜𑍍𑌝𑌿𑌤𑌂 𑌵𑌚𑌃।
𑌰𑌸𑍋𑌜𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌷𑍁 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌕𑍍𑌵𑌚𑌿𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌤𑌾 𑌤𑌥𑌾॥

பொருளணி சொல்லணிகள் இன்றிவரும் வாக்கியம் நிரலங்காரம் (-அணியில்லாதது) எனப்படும் குற்றமுளதாம். ஆயினும், பொருள்வீறுபெற்று விளங்குமிடங்களில் அது குற்றமாகாது, குணமேயாம்.

உதாரணம்:—

𑌯𑌾𑌚𑍍𑌞𑌾𑌂 𑌦𑍈𑌨𑍍𑌯𑌪𑌰𑌾𑌭𑌵𑌪𑍍𑌰𑌣𑌯𑌿𑌨𑍀𑌂
𑌨𑍈𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑌵𑌃 𑌶𑌿𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌃
𑌸𑍇𑌵𑌾𑌸𑌂𑌚𑌲𑌿𑌤𑌃 𑌕𑌦𑌾 𑌰𑌘𑍁𑌕𑍁𑌲𑍇
𑌮𑍌𑌲𑍌 𑌨𑌿𑌬𑌦𑍍𑌧𑍋𑌞𑍍𑌜𑌲𑌿𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑍁𑌦𑌧𑌿𑌨𑌾
𑌨𑍈𑌵𑍋𑌪𑌰𑍋𑌧𑌃 𑌕𑍃𑌤𑌃
𑌪𑌾𑌣𑌿𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿 𑌮𑍇 𑌹𑌠𑌾𑌤𑍍𑌕𑌿𑌮𑌪𑌰𑌂
𑌸𑍍𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌧𑌨𑍁𑌰𑍍𑌵𑌾𑌞𑍍𑌛𑌤𑌿॥

(இது ஸேதுபந்தனசமயத்தில் இராமன்கூறியதாக அமைந்துள்ளது)

எளிமைக்கும் அவமதிப்புக்கும் இலக்கான இரத்தற்றொழிலை இக்ஷ்வாகுவமிசத்தோர் கற்பிக்கப்பட்டிலர். ரகுகுலத்தில் (உதித்தோரால்) தொண்டுசெய்வதற்குரிய தலைமேற் கைகளைக்குவித்தல்

எப்பொழுது மேற்கொள்ளப்பட்டது? அவையெல்லாம் (என்னால் இப்பொழுது) செய்யப்பட்டன. ஆனபின்பும், ஸமுத்திரராஜனால் (அவ்வாறு செய்யாமல்) தடைசெய்யப்படவில்லை. இப்போது வேறு என்செய்வது? என் கை வில்லையெடுக்கவிரும்புகின்றது.

இங்கே அணியொன்றும் இல்லாதிருப்பினும், பொருள் சிறப்புற்றுநிற்றலால் இதுபோல்வன நிரலங்காரமென்னும் குற்றமுடையனவன்றிக் குணமுடையனவேயாம்.

## 15. அசிலீலம்

𑌅𑌸𑌭𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌂 𑌯𑌦𑌶𑍍𑌲𑍀𑌲𑌂 𑌤𑌦𑌸𑌭𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌵𑌾𑌚𑌿 𑌵𑌾 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌹𑍇𑌤𑍁𑌨𑍋 𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌤𑌿𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ॥

அவையிற் கூறத்தகாத சொல்வழக்கும், வேறுபொருளோடு இடக்கர்ப்பொருளையும் உணர்த்தும் சொல்வழக்கும் அசிலீலம் என்னும் குற்றத்தின்பாற்படும் (என்று முன்பு கூறப்பட்டது). ஆயினும், பெரும்பான்மையும் அத்தகைய வழக்கைக் கவிகள் மேற்கொண்டிருப்பது உண்டு. அவ்வாறு கவிகள் மேற்கொள்வது ஏற்ற இடங்களொடு பொருந்தியிருத்தலால், அவை குற்றமன்றிக் குணமாம்.

உதாரணம்:—

𑌅𑌦𑍍𑌯𑌾𑌪𑌿 𑌤𑌤𑍍𑌕𑌨𑌕𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌘𑍃𑌷𑍍𑌟𑌗𑌣𑍍𑌡𑌂
𑌆𑌸𑍍𑌯𑌂 𑌸𑍍𑌮𑌰𑌾𑌮𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌰𑌤𑌾𑌭𑌿𑌯𑍋𑌗𑍇 ।
𑌆𑌨𑍍𑌦𑍋𑌲𑌨𑌶𑍍𑌰𑌮𑌜𑌲𑌸𑍍𑌫𑍁𑌟𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌬𑌿𑌨𑍍𑌦𑍁
𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌫𑌲𑌪𑍍𑌰𑌕𑌰𑌵𑌿𑌚𑍍𑌛𑍁𑌰𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 ॥

உபரிசுரதம் காரணமாக, (அசைகின்ற) பொற்குண்டலங்களால் உராய்கின்ற கன்னங்களையுடையதும், அசைவதினாலுண்டான சிரமத்தால் தோன்றிய வியர்வைமுத்துக்களால் வியாபிக்கப்பட்டதுமான என் காதலியின்முகத்தை இன்னும் நினைத்துக்கொண்டேயிருக்கிறேன்,

இங்கே வந்துள்ள உபரிசுரதம் முதலியவை அவையல்வழக்கு களேயாயினும், அவை காமச்சுவைக்கு உதவுவனவாதல்பற்றிக் கவிஞரால் மேற்கொள்ளப்பட்டனவாதலிற் குணமேயாம்.

### 16. தேச விரோதம் முதலியன

𑌦𑍇𑌶𑍋𑌽𑌦𑍍𑌰𑌿𑌵𑌨𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌦𑌿𑌃 𑌕𑌾𑌲𑍋 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌂𑌦𑌿𑌵𑌰𑍍𑌤𑌵𑌃।
𑌨𑍃𑌤𑍍𑌤𑌗𑍀𑌤𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌯𑌃 𑌕𑌲𑌾𑌃 𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 ॥ கருங ॥

𑌚𑌰𑌾𑌚𑌰𑌾𑌣𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌲𑍋𑌕𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾।
𑌹𑍇𑌤𑍁𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑍋 𑌨𑍍𑌯𑌾𑌯𑌃 𑌸𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑌾𑌗𑌮𑌃 ॥

𑌤𑍇𑌷𑍁 𑌤𑍇𑌷𑍍𑌵𑌯𑌥𑌾𑌰𑍂𑌢𑌂 𑌯𑌦𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇।
𑌕𑌵𑍇𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌦𑍍𑌦𑍇𑌶𑌾𑌦𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑍀𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ கருரு ॥

𑌵𑌿𑌰𑍋𑌧𑌃 𑌸𑌕𑌲𑍋𑌽𑌪𑍍𑌯𑍇𑌷 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍𑌕𑌵𑌿𑌕𑍌𑌶𑌲𑌾𑌤𑍍।
𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 𑌦𑍋𑌷𑌗𑌣𑌨𑌾𑌂 𑌗𑍁𑌣𑌵𑍀𑌥𑍀𑌂 𑌵𑌿𑌗𑌾𑌹𑌤𑍇 ॥ கருசு ॥

தேசமாவன: மலை காடு நாடு முதலியன. காலமாவன: இரவு பகல் இருது முதலியன. கலையாவன: பொருளையும் இன்பத்தையும் பற்றிய ஆடலும் பாடலும் முதலியன. உலகமாவது: தாவரசங்கமப் பொருள்களின் நிகழ்ச்சியாம். நியாயமாவது: தருக்கவித்தையாம். ஸ்மிருதி என்பது வேதமும் ஆகமமுமாம். கவியின்சோர்வு காரணமாக (மேற்கூறிய) அவ்வவற்றெடு பொருந்தாவகையாற் கூறப்படின் அவை அவ்வவ் விரோதம் (-மாறுபாடு) என்று கூறப்படும். ஆயினும், கூறும் கவியின் திறமையாற் சில இடங்களில் அவை குற்றமெனப்படாது, குணமாதலை எய்துவனவாம். இவற்றுக்கு உதாரணம் வருமாறு:—

### I. தேசவிரோதம்

𑌤𑌸𑍍𑌯 𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑍇𑌣 𑌤𑌦𑍁𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌨𑌿 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇।
𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌂𑌶𑍁𑌕𑌪𑍍𑌰𑌵𑌾𑌲𑌾𑌨𑌾𑌮𑌾𑌸𑍍𑌪𑌦𑌂 𑌸𑍁𑌰𑌶𑌾𑌖𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

அவ்வரசனது பிரபாவத்தால், அவனுடைய உத்தியானங்கள் கற்பகத்தருக்கள்வளர்தற்குரிய இடமாயின.

இங்கே தேவருலகத்தில் வளர்தற்குரிய கற்பகத்திற்குப் பூவுலகத்துப்பொழிலே யிடமாகக் கூறியமையால், இது தேச விரோதமாதற் கேற்புடையதுபோற்றோன்றினும், அரசன் பிரபாவத்தைமிகுத்துரைக்கும் கருத்துவகையால், இது குணமாயிற்று.

### II. காலவிரோதம்

ராஜ்ஞாம் விநாஶபிஶுநஶ்சசார கரமாருத: ।
துந்வந் கதம்பரஜஸா ஸஹ ஸப்தச்சதோத்கமாந் ॥

கதம்பமலர்களையும் ஏழிலைப்பாலையின் முகைமொக்குகளையும் உதிர்த்துக்கொண்டு, அரசர்களின்விநாசத்துக்கு அறிகுறியாய்க் கடிய காற்று வீசிற்று.

இங்கே வெவ்வேறுகாலங்களுக்குரிய கதம்பமலரையும் கடுங்காற்றை (-மேல்காற்றை)யும் ஒருகாலத்தவாகக் கூறியதனாற் கால விரோதமென்னும் குற்றமாதற்கேற்பினும், அரசர்தீங்கிற் கறிகுறியாகிய உற்பாதமாகக்கூறும் கருத்துவகையால் அமைந்து, குணமாயிற்று.

### III. லோகவிரோதம்

சந்த்ரபாதாதபி தீக்ஷ்ண: காமீ ஶிஶிரம் ஹவ்யவாஹநம் ।
காந்தாவிரஹக்லேஶவிஹ்வலோ கணயத்யயம் ॥

காதலியின்பிரிவால் ஆற்றாமைமிகுந்த காதலன் சந்திரனது கிரணங்களினும் தீயைக் குளிர்ந்ததாக நினைக்கின்றான்.

இவ்வாறு தீயைக் குளிர்ந்ததென்றுகூறுதல் தீயின் வெய்ய இயல்போடு பொருந்தாததாய் உலகவிரோதம் என்னும் குற்றத்திற்கிடனாதற்கேற்புடைத்தாய்த் தோன்றினும், 'காமமிக்கோர்க்கு அக்காமத்தைத் தூண்டுமியல்பான், நிலவு அவரால் மிகஅஞ்சப் படுவதாம். எனவே, அவர்க்குத் தீயினும் அது வெய்தாய்த்தோன்றும்' என்னும் கருத்துவகையால், இது, உலகவிரோதமின்றிக் குணமாயிற்று.

IV. யுக்திவிரோதம்—(நியாயவிரோதம்)

ஸ ஸம்க்ஷோபஸூ ாதிவ க்ஷீஷராஸெரஸாணஃ
ஸ ஸூயமாக்தாநாம் விரஹஜவஷவு திவியிஃ।
ஹணெஹுஷு வெதவுஸநகரெஹ்ாZவி யஷயம்
வஶாநாெஆஹஷிஷைஜாதெஷவ ரணு॥

துன்பத்தைப் போக்கவல்ல நின்குணங்களினின்றும் தீயோர்களுக்கு வெறுப்புண்டாதலானது, அமிருதத்தைப் பருகுவதனல் மரணமுளதாதலும், சந்திரனல் குமுதம் குவிதலும், பரிதியால் சக்கரவாகப்பறவை விரஹ (-பிரிவுத் துன்ப)மடைதலும் ஆகும்.

இங்கே கூறியிருக்கும், அமிருதபானத்தால் மரணமுளதாதல், சந்திரனல் குமுதம் குவிதல், பரிதியால் சக்கரவாகம் விரஹமடைதல் முதலியவை நிகழாதவையாதலால், இது, நியாயவிருத்தமாவதுபோற்றேன்றும். எனினும், கூறுபவனுக்கு அவை அங்ஙனம் நிகழ்வன என்னும் கருத்தின்றி, அவ்வாறுநிகழின் அதனை ஒக்கும் என இயல்பல்லாமையைக் காட்டுதற்குரிய உவமைகூறுதலே கருத்தாதலின், அக்குற்றமின்றி, இது குணமேயாம்.

[தொடரும்.]

---

ஸ்ரீ:

# இராமசெயம்

[இராமாயணத்திருப்புகழ்]

## உத்தரகாதை

(சOO-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

மூலமு மாகி யயனொடு வார்சடை
யீசனு மாகி நடுவுற வேயொரு
மூவரு மாகி வெளிவளி தீபுனல் செகமாகி
மூவுல காகி யிதனிடை யாருயிர்
யாவையு மாகி வெகுவித மாயினை
மூதறி வாலுன் மகிமையை ஞானமொ டுணர்வார்யார்

மேலெழ வோதி யறிபவர் போன்மிகு
தேசிக ராகி யுயர்குவர் தாழ்குவர்
வீடுபெ றூர்கள் குருடர்பி னேசெலு மவர்போலே
வீணர்கள் போன வழிமிசை போயடி
யேனும்வி ழாத நரகிலை வானதி
மேவிய பாத மினியிங்ங னேதர அமையாதோ

மாலிய வானு மிளையசு மாலியு
மாலியு மாக வொருதனி மூவரு
மாதவ மேவி நெடியபிர ராயமும் வலியாவும்
வாழ்கம லேச னுதவுகை யாலுயர்
பூமியு நாக ருலகொடு வானமும்
வாதையில் வேக முடுகியொ ரூரினி யெமதாகக்

கோனுகெ ளுமுன் மயனுமு னீரிடை
மாதிரி கூட கிரிமிசை மாமதில்
கோபுர வாசல் தெருமனை காணலின் அதின்மேவிக்
கோதறு தேவ தருமதை யாள்பெறு
மூவகை மாத ருடன்மகிழ் காதைகள்
கூறிய வேத குறுமுனி யாலுணர் பெருமாளே. (8)

காவுளதே வந்துபி தக்கிண முற்செய
வாயுளதே நின்றுது திக்கம லர்க்கெழு
காடுளதே சென்றுப றிக்கவி ணைக்கர முளதேநின்

காதைகளே கொண்டுநி றைத்திட வுட்செவி
தானுளதே நின்சொரு பத்தைவி ருப்பொடு
காணவுமே கண்களெ னக்குள மிக்கிவை உளவாயுஞ்

சீலமிலேன் வஞ்சக னெத்தனு றுப்பிலி
காமுகன்மூ டன்கப டத்தன்மி கப்பொருள்
தேடுமுலோ பன்க்ருபை யற்றவன் வக்கிரன் நரகூடே

சேருமதோ சஞ்சல புத்தியை விட்டுனை
நாடிடவே யன்பொடு பத்தியு மெய்ப்படு
சேவையுநீ தந்துவி ழிக்கடை வைப்பதும் ஒருநாளே

மாலியவா னின்புறு வச்சிர முட்டியும்
யாகவிரோ தன்சுத கத்தனு மத்தனு
மாதுன்முகே சன்கிளர் பக்கனுன் மத்தனெ டெழுவோரை

மானனையாள் சுந்தரி பெற்றனள் பொற்புள
கேதுமதீ யென்பவள் வெற்றிப டைத்தசு
மாலிகுலா வும்படி நற்கைக சிப்பெய ரவளோடு

மேலினையாள் கும்பநி சிப்ரப லத்தியை
வாழ்வெனவே தந்தனன் மற்றிள வற்கான்
மேவனலோ னென்பவர் மற்றிரு புத்திரர் உளரானர்

வீறமுனே தந்தைய ருக்ரமி குத்தன
ராவுடனே யண்டரு ரைத்தன ரக்கதை
வீரியகே ளென்றகு டத்தனை மெச்சிய பெருமாளே. ()

வாழும றங்களி சித்து மெத்திய
ஊசன்ம தங்கிகு றத்தி யற்கைய
மானைகள் சம்பிர தத்து றைக்கவி நெறியோதும்

மாலைகொள் வஞ்சியு ரைக்கு மக்கலி
தாழிசை வெண்டளை கைக்கி ளைத்திற
மாசில்க லம்பக லக்க ணப்படி மொழிவேன்யான்

ஏழுக ரும்புயல் கற்ப கத்தரு
மாமணி சங்கிவை சற்று மொப்பல
யாவரும் விஞ்சுகொ டைப்ரப லத்துவம் உடையாய்நீ
யானுனை யின்றுது திக்கு மித்தமிழ்
கேளென நின்றுபி ரட்ட டித்திடு
மேழமை யன்றியு னைத்து தித்தருள் பெறுவேனோ

வாழிய வண்டரு ரைத்த ரற்றிய
வாசக நின்செவி யிற்பு கக்ருபை
யாகியெ ழுந்தனை புட்க ழுத்தினின் மிசையானாய்
ஆரமர் கண்டனை சுற்ற ரக்கரை
மாளம லைந்தனை விற்கை பற்றினை
மானமு கந்தனை கொக்க ரித்தனை யிருவோர்தாம்

வீழவு கந்தனை சக்ரம் விட்டனை
மாலியி றந்தன னக்க ணத்தினில்
வீரரி லங்கையும் விட்டொ ளித்தனர் பிலமீதே
மேவின பின்புவி ளைத்த விக்கதை
கேளென வன்பொடு ரைத்த கத்தியன்
மேலுமி ருந்துசொ லப்ரி யப்படு பெருமாளே. (10)

சளத்தினை மாமதி யென்று
குருட்டினை வேல்விழி யென்று
சகத்தினை வாழ்கிற தென்று தளர்பேடி
தனைப்பொரு சேவக னென்று
கிழத்தினை நீருக னென்று
.........யாவுமு ணர்ந்து கவிபாடி

வெளிப்பட நாமுனி யம்ப
லசத்திய மானது கொண்டு
மிகுத்திடு பேறுக ளின்றி வெறுநாள்போய்
மிடித்தது போதும யர்ந்துன்
அடித்துணை பாடியு கந்து
வினைக்கரை யேறுத வங்கள் பெறுவேனோ

ஒளித்தசு மாலியெ ழுந்து
மகட்குரி யாரைவ ழங்க
வுலப்புறு பூமியில் வந்து திரிவான்முன்

உரைத்தகு பேரன்ம ருங்கு
நிதிப்படை சூழவி யங்க
ளொலிப்பவி மானமி வர்ந்து வருவானை

அளித்திவ னோநமி லங்கை
புரப்பனெ னுவிடர் மண்டி
யடற்பில மீளவி ழிந்து முதலோன்முன்

அரற்றின மாமகன் முன்பி
னுரைத்தது கேளென வென்றி
யகத்தியர் கூறவு ணர்ந்த பெருமாளே. (11)

இகழ்வாரடித் திடுவார்
பொருளேபறித் திடுவார்
இவனாரெனப் பொடிவார் முதலானோர்

இவரேயெனக் குளபா
தகவேலைகைக் கொளுவார்
எதிரேயெனைப் பணிவார் தொழுவார்மேற்

புகழ்வார்நினைத் திடுவா
ரிவரேகொடுத் திடுநீள்
புதுவாழ்வுபெற் றிடுவார் இதனாலே

பொதுவாயபத் தனுமாய்
வினையோயுமொப் பறுதாள்
புகுவேனெனக் கிதுவே அமையாதோ

மகளேமடக் கொடியே
திருவேயனப் பெடையே
வளர்கேகசிப் பெயராய் அயனார்தம்

மகனார்தமக் குரியாய்
மனைசேர்கிழத் தியுமாய்
வாமேவுபுத் திரர்நீ பெறுவாயேன்

முகமாமெடுக் கலுமாம்
நமதூர்தனிற் புகலாம்
முறையாமெனப் பெறுவோன் மதிகூற
முனிசோலைபுக் கனர்கா
ணனவேயகத் தியனூர்
மொழியால்வழுத் திமையோர் பெருமாளே. (12)

காகமுமி ரங்கிடு மேபகை விஞ்சிய
கூகையுமி ருந்தழு மேகழு கும்பல
காலுளம ழுங்குறு மேபெரி தன்பொடு வருபேயுங்
காலொடுவெ தும்பிடு மேநரி யுஞ்சில
வோரியுமெ லிந்திடு மேபுழு வுங்கொசு
கானதும லங்கிடு மேபெறு தந்தையும் ஒருதாயும்
ஆகுலம டைந்திடு மேபர வுங்கிளை
கோவெனவி ழுந்தழு மேயுயிர் மைந்தனும்
ஆவெனவ யர்ந்திடு மேபுணர் மங்கையும் நிலைகாணுள்
ஆகிவித னம்படு மேயுயிர் சென்றென
தூழலுட லங்கொடு கானிலெ ரிந்திடு
மாகினமதென்றுபின் யாவர்தொ டர்ந்துள முருகாதார்
கேகசிந டந்தனள் சோலைபு குந்தனள்
நாலுமுக மன்சிறு வோனெதிர் நின்றனள்
கேகயமெ னும்படி சாயல்பொ ருந்தினள் முனிபாராக்
கீதமொழி நின்பெய ரேதுவி ளம்பென
வோதினள்ப ணிந்தனள் வாழ்வரு ளென்றனள்
கேடுசெயு மைந்தரா லாதிலை யென்றனன் அவரோடோர்
... ... ... ... ...
... ... ... ...
... ... ... ...
*நாகரிக மைந்தனும் வீடண னுங்கொடி
யாளிடை பிறந்தனர் நால்வரு மென்றுமெய்ஞ்
ஞானமிகு கும்பசனே தவி ளங்கிய பெருமாளே. (13)

* இவ்வடியின் முற்பகுதி ஏட்டில் இல்லை.

நாவும டங்கி யிருமல்
　　கோழையெ ழுந்து விரவு
　　நாடிகு லைந்து விழியும் 　　நிலையேயாய்

நாசிகு ளிர்ந்து விதன
　　தாடைவி ழுந்து பழைய
　　நாழிகை வந்து குறுகும் 　　ஒருபோது

நீவரு கின்ற வழகு
　　மார்புநி றைந்த திருவு
　　நேமியு மந்த வளையும் 　　அமைபாணி

நீடிய தண்டு முகமும்
　　லோசன புண்ட ரிகமும்
　　நீண்முடி யும்பொ னடியும் 　　மறவேனே

ராவண கும்ப கருணர்
　　மூவுல கெங்கு மறுக
　　யாகம ழிந்து முனிவர் 　　தடுமாற

எறிவி ழுந்து திரிய
　　நாசியி ழந்த வடிவி
　　யாரையு நின்று சருவி 　　வலிதாக

மேவிமு யங்கி விதறி
　　யோடின ரங்க முதற
　　வீடண னன்பு நெறியும் 　　வழுவாதே

மேன்மைபொ ருந்த வவர்கள்
　　காரணி யங்கள் மலய
　　வேதனி யம்ப வருள்செய் 　　பெருமாளே. (14)

... ... ... ... ...

ஒருகுல மீதிற்பி றந்தும் ... ... ...
　　ஒருகுல மீதிற்பு குந்தும் ... ...
　　ஒருவனை யேபற்றி நின்றும் 　　அநுராகம்

உபயமு நேரொத்த ணைந்த
　　வவையிடை யேகொர்ப்ப சங்கை
　　யுடன்வர வேபெற்றி டும்பை 　　படுகோலத்

தெரிவைய ராகப்பி றந்து
மறுகவி டாமற்பு லிங்க
செனனம தாய்நிற்கை தந்த க்ருபையோய்நீ

திருவடி சேவிக்கு மன்பும்
உதவிவி சாரிப்பை யென்று
தெளிவுடை யேன்மற்ற தொன்றும் அறியேனே

நிருதர்பி ரான்மற்ற டங்கி
யருமறை யோதித்த வங்கள்
நெடுகிய நாளிற்பு ரிந்து தலைசேர

நிகராறு வாளிட் டரிந்து
கனன்மிசை யேயிட்டு நின்ற
நிலைமையை வேதத்தர் கண்டு க்ருபையாகி

அரிதலை நீபெற்றி டென்றும்
நரரைவி டாய்மற்றை யண்ட
ரமரிடை சாவற்றி டென்றும் உலகாளும்

அரசுன தாகக்கொ ளென்றும்
வரமது பாலித்த பண்பை
யயன்மக னோதத்தெ ளிந்த பெருமாளே. (15)

குத்திர மாக நினைவு பத்தி
யுத்தமர் போல வடிவு முத்தி
ரைக்குறி மாலை முடிய ணைத்தும் உளனாகிக்

கொற்றவர் வாசன் மருவி மெத்த
மெத்திபு பாய வகையின் மிக்க
குக்குட சால முதல்வ ளர்த்து மணியாழி

முத்துட னுடை கனக மிட்ட
சத்திரம் வீசு கவரி வர்க்க
முற்படு சாதி வகைப றித்து நகையோடே

முட்டற வேகு களவு வித்தை
கற்றிடு நாள்க ளமையு நிற்க
முத்தியை நாட வினியெ னக்கு மதிதாராய்

பத்திரு தோள னிளவ லுற்ற
மெய்த்தவ மேவ ......... மிக்க
பற்பன்மு னேடி யினியெ னக்கு நிலைகாணைப்

பட்டணம் வாழி யெனவ ரற்ற
மற்றவ னுவில் வனிதை யுற்ற
பக்குவ மீதி லவைக டப்ப வதனாலே

சித்திரை வேணு மெனவு ரைப்ப
வக்கண மேய தயன ளித்து
நிற்கல னேக விழும ரக்கன் நெடுவாணுள்

நிற்பல மான தெனவு ரைத்த
நற்குறு வேத முனியை மெச்சு
நிட்கள ராம ரெகுகு லத்தர் பெருமாளே. (16)

[தொடரும்]

T. K. இராமாநுஜையங்கார்,
உதவிப்பத்திராசிரியர்.

---

440 திமிரம் - இருள். மகரம் - முதலை. பகர்நர் - விற்போர். இகலி - மாறுபட்டு. மலையினும் நிலத்தினும் கடலினும் விளையும் பண்டங்களை விற்பவராரவாரமும் கொள்வோராரவாரமும் மாறுபட்டுப் பகைத்தெழுந்த மன்னர் பாசறையிலெழுமொலிபோல மிகும் என்றவாறு.

441 மறுமையாக்கம் - மறுபிறப்பிற் பெறத்தக்க செல்வம். இவண் - இவ்விடத்து. ஒருமையுள் - ஒருபிறப்பில். இனி, 442 முதல் 456 முடியவுள்ள கவிகளால் திருவழுதிவளநாட்டிலுள்ள அரசர்சிறப்புப் பேசப்படுகிறது.

442 உலப்பு - அழிவு. குணபாற் பிறங்கல் - கீழ்த்திசைமலை - உதயகிரி. இரிய - ஓட. குலம் - கூட்டம். உயிர்த்தல் - வெளியிற்பரப்புதல். ஆயிரங்கதிருயிர்ப்போன் - சூரியன். குபேரன் - சந்திரன். இரு குலம் - சூரிய சந்திர குலங்கள். இருகுலத்துதித்த மூவர் - சூரிய சந்திர வம்சத்திற் பிறந்த சேர சோழ பாண்டியர்.

443 வில்லைக் கையால் மேருவிற் பொறித்தவன் - (தனது) விற்கொடியை மேருவிற் பொறித்த சேரன். போர்வேங்கையைக் கையால் மேருவிற் பொறித்தவன் - சோழன். வேங்கை - புலிக்கொடி. கயலை நற்கையால் மேருவிற் பொறித்தோன் - பாண்டியன். கயல் - மீனக்கொடி. இவர் மேருவிற் றம் கொடியைப் பொறித்த செய்தி சிலப்பதிகார முதலியவற்றுல் அறியத்தகும். இம்மூவர்க்கும் உரிய நகரங்கள் கூறிய முறையே சேரனுக்கு வஞ்சியும் சோழனுக்குப் புகாரும் பாண்டியற்குக் கொற்கையும் ஆயினும், இவர்கள் வளர்ந்து சிறந்தது குருகைமாநகரத்தென்றவாறு.

444 உத்தரகுரு - போகபூமிகளுள் ஒன்று. புரந்தரன் - இந்திரன். உரகர் - நாகர். அந்தாமம் - பரமபதம். இரு சுடர் - சூரிய சந்திரர். இருசுடர் மரபின் மூவர் - சேர சோழ பாண்டியர். அகநகர், மாந்தர் வேந்தராய் வாழ்வது என்க.

445 இடன் - (பகையினை வெல்லுதற்கேற்ற) இடம். உடக்குதல் - போர்செய்தல். காலம் - (பகைமேற் செல்லற்கேற்ற) காலம். கருவி - படையும் பொருளும். இயற்றுஞ்செய்கை - செய்யும் போர்வினை. அவர்கள் - அவ்வமைச்சர். அவர்கள் கடனுணர்ந்து பரிப்ப என இயைக்க. கழிப்பர் என்ற வினைக்கு அரசர் என்ற எழுவாய் அதிகாரத்தான் வருவித்துரைக்க. அரசர், அமைச்சர் திடனுணர்ந்து (அவருடன்) அளவளாய்த் தமவாம் திரிபுவனமும் தழைதரும் அக்கடனுணர்ந்து அவர்கள் பரிப்பத்(தாம்) எண்ணெண்கலையொடும் பொழுதினைக் கழிப்பார் என முடிவுகொள்க. இதன் முதலிரண்டடிகளுள், 'கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும், அருவினையும் மாண்ட தமைச்சு' என்ற திருக்குறட்கருத்துப் பயின்றுள்ளமை காண்க.

446 பஞ்சகல்யாணன் - முகத்தினும் கால்கள் நான்கினும் வெண்மை நிறம்வாய்ந்த குதிரை. கவுள் - கன்னம். கவுள் மதக் கலுழி - கன்னமதப் பெருக்கு. குஞ்சரம் - யானே. எஞ்சல் - குறைதல். பொருநர் - போர்வீரர். விருத்தி - தொழில். புரவியும், குஞ்சரமும், தேர்களும் எண்ணில; பொருநர் விருத்தி கைக்கொண்டோர் எண்ணிலார் என இயைக்க. புறந்தரல் - தோற்றல். விறல் - வெற்றி.

447 குறும்பர் - சோர்வுநோக்கியிருந்து பேரரசனைநலியும் தீய குறுநில மன்னர். தானைத்தலைவர் - படைத்தலைவர். குறும்பு - சேட்டை. அடக்குபு - அடக்கி. திறை - கப்பம். அவற்றால் - (இயற்றலும் ஈட்டலும் காத்தலு மாகிய) அச்செயல்களால். அவற்றாலுறும் பயன் (ஆகிய) இவை இங்கு உயிர்க்கு: என இயைக்க. புறத்த - அயலிலுள்ளனவாகிய. உபயம் - (குறும் பொடு சேர்த்தெண்ணப்பட்ட) பல்குழுவும் உட்பகையும் ஆகிய இவை. பிறந்திறப்பவற்றை - தோன்றி எல்லேகடந்து தீங்கியற்றுமவற்றை. தெறுந் தொழில்புரி - தண்டித்தலைச்செய்கின்ற. கடைப்பிடித்தவர் - உறுதியாகக் கொண்டு ஒழுகுமவர். இங்கும் அரசர் என்னும் எழுவாய் அதிகாரத்தான் வந்தியையும். பின்னும் இவ்வாறே கொள்க. இதனுள், "இயற்றலும் ஈட்ட லும் காத்தலும் காத்த, வகுத்தலும் வல்ல தமைச்சு", "பல்குழுவும் பாழ் செய்யும் உட்பகையும் வேந்தலைக்குங், கொல்குறும்பும் இல்லது நாடு" என்னுங் குறட்கருத்தமைந்திருத்தல் காண்க.

448 நிரப்பு - வறுமை. இடும்பை - துன்பம். நிரப்பிடும்பை - வறுமையா லுண்டாகிய துன்பம். இரப்பவர் - யாசிப்போர். நிதி - செல்வம். கிளை - சுற்றம் - ஆட்கட்டு. உரத்தவர் - வலியோர். தனித்த எளியர் - துணைவலி யில்லாத எளியோர். நலிதல் - வருத்துதல். அகிலம் - நிலமுழுதும். புலவர் புதுமொழி - புலவராற்புகழ்ந்து பாடப்படும் புதிய பாடல்கள். மொழி இங்கு ஆகுபெயராய்ப் பாடலையுணர்த்திநின்றது. புலவர்புதுமொழி புணராப் பொழுது - புலவர்கூறும் புதியபாடல்களை யடையாதபொழுது. அவப் பொழுது - வீண்பொழுது. 'காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்' என்ற குறளும் அதற்குப் பரிமேலழகருரைத்த வுரையும் இங்கு நோக்கத் தகும்.

449 இதனுல் அரசர் காலைப்பொழுதும் நண்பகற்பொழுதும் போக்கு மாறு கூறப்படுகிறது. தேசிகரெனத்திருந்தினர்-சதாசாரியர் - நல்லாசிரியர். தானம் - அறத்தாறீட்டியபொருளைக் கைம்மாறுகருதாதுகொடுக்கும் அறக் கொடை. புரந்து - கொடுத்து. புனலாழ்ந்து - நீராடி. உயிர்க்குக்காவலாம் முகுந்தன் - உயிர்க்கு ரக்ஷகனான திருமால். அருச்சனைசெய்கருமம் - திருவா ராதனம். நிகழ்த்தி-செய்து. பகற்கண்-பகற்போதில். விருந்து-விருந்தினர்.

அமிர்தம் - அமுதம்போன்ற சுவைமிக்க உணவு. பகிர்ந்து - பங்கிட்டு. அருந்து பான்மை - உண்ணுமியல்பு.

450 இசை குலாம் - புகழ் விளங்குகின்ற. கமலமலர்மகள் - இலக்குமி. இறைவன் - திருமால். இறைவர் - திருவழுதிவளநாட்டுக் குருகூரில் வசிக்கும் அரசர். நசை - விருப்பம். வசை - பழி - குற்றம். அரசர் திருமாலை யாராதிக்குங்கால் அசைக்கும் மணி, அவர்தம் அரமனைவாயிலிற் கட்டிய ஆராய்ச்சிமணியை அசையாமணியாக்கியதென்றவாறு. இவர்நாட்டுத் தீங்கு நிகழாதென்பது குறிப்பு.

451 சேமித்தல் - பாதுகாத்தல். மல்குதல் - நிறைதல். புரத்தல் - கொடுத்தல்.

452 இறைவனால் - கடவுளால். இறைவர்க்கு - அரசர்க்கு. ஐம்பானிரட்டி - நூறு. 'வேதநூற்பிராயநூறும்' என்ற பெரியாரருளிச்செயல் இங்கு நோக்கத்தகும். ஆயுளும் நீடுழி நிறைவதாகுக என இயைக்க. நீடுக - மிகுவதாக. நல்லறஞ்சார் பொறைவலார் - துறவறத்தையடைந்த பொறுமையான்மேம்பட்டார். அரசர்க்கமைந்த ஆண்டு நூறேயாயினும் பெருந்திருவொடு நீடுவாழ்கெனத் துறவறத்தார் வாழ்த்துதலானும், இல்லறத்தாரும் துயிலெழுங்கால் அரசன் நீடுவாழ அருளெனத் திருமாலை வணங்கி வாழ்த்துதலானும் அவர் பெருந்திருவொடு நிறைந்த ஆயுளும் உடையராய் வாழ்வர் என்பது கருத்து.

453 அறத்தியலிழுக்குங் கொலையும், அறத்தியலிழுக்கும் அபிமானமும் அறத்தியலிழுக்கும் அழித்திடுந் தொழிலும் ஆகிய இவையென்க. அபிமானம் - தன்மதிப்பு. அழித்திடுந்தொழில் - பகைத்திறந்தெறுதலாகிய செயல். படை - ஆயுதம். வாரணம் - யானை. புரவி - குதிரை. கடாவல் - செலுத்தல். வாரணம் கடாவல் புரவிகடாவல் தேர்கடாவல் எனக் கூட்டுக. பகைவர்மாட்டினுக்கு-பகைவர்பக்கத்துக்கு. நமன்-எமன். திறம்-தன்மை. இதனுள், "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா-மான முடைய தரசு" என்ற திருக்குறட்கருத்துப் பயின்றுவந்தமை காண்க.

454 பிறக்கொடையுணர்வு - பின்செல்லும்நினைவு. த(ம்)மை - அரசரை. பரி - தாங்குகின்ற. பனைக்கைப் பெருமலை - பனைபோலுங் கையினையுடைய பெரிய யானை. புறக்கொடை புரிந்து - முதுகிட்டு - தோற்று. திக்கயங்கள் - திசையானைகள். பெறையுறீஇ யென்றிருப்பதைப் பொறையுறீஇ யென்று திருத்திக்கொள்க. பொறை - பாரம். எண்டிசையானைகளும் தாங்கிநின்ற பூபாரத்தைத் தம்தோள்களாற்றாங்கிய இவ்வரசருடைய அறக்கொடையும் ஆற்றலும் கண்டு திசைகாவலரான தேவரும் இவர்பால் அன்புசெய்வர்,

சிவபெருமானும் உமாதேவியாரிடம் தம்செயலினும் இவர்செயலினை வியந்து பாராட்டிக்கூறுவர் என்றவாறு. கயிலையாளி - சிவபிரான். மெய்யுறக்கொள் தையல் - சரீரத்திலே (ஒருபாதியாகக்) கொண்ட பெண் - உமாதேவி. கரி - யானை. கவித்தது - போர்த்தது.

455 சூரியர் - மதிநுட்பமுடையார். அளி - கருணை. குடியோம்பல் - குடிகளைப் பாதுகாத்தல். குடிகொளும் - நிலையாகத்தங்கிய. ககனம் - ஆகாயம். மாரி - மழை. இதனுள், "கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்—உடையானும் வேந்தர்க் கொளி", "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட் - கிறையென்று வைக்கப்படும்", "இயல்புளிக் கோ லோச்சும் மன்னவன் நாட்ட—பெயலும் விளையுளுந் தொக்கு" என்னுங் குறட்கருத்துக்கள் அமைந்துள்ளமை நோக்கத்தகும்.

456 எண்ணிரண்டாண்டு - பதினாறுவயது. முடி - கிரீடம். சிரம் - தலை. முத்திரை - முத்திரைமோதிரம். இயக்குதல் - செலுத்தல். திதலை - தேமல். மாணிழை-சிறந்த பூண்(அணிந்த மங்கை-பட்டமகிஷி.) வனத்துட் சேறல் - வானப்பிரஸ்தாச்சிரமநிலைமேற்கொள்ளல். அதலம் - கீழேழுலகத் தொன்று.

457 வேத்தியல் - அரசியல். சூத்திரமியற்ற - சூத்திரங்களுக்குரிய அநுஷ்டானங்களைச்செய்ய. சுருதி - வேதம். மிருதி - ஸ்மிருதி. சமைந் தேன் - ஆயத்தமானேன்.

இனி 458 முதல் 506 முடியவுள்ள கவிகளால் குருகைநகர்வேதியர் சிறப்புப் பேசப்படுகிறது.

458 ஆதிநாதப்பெம்மான் - திருக்குருகூரிற் கோயில்கொண்டு எழுந் தருளியிருக்கும் திருமால். ஆதியென்றோது - பழமையானவையென்று சொல்லப்படுகிற. ஐம்பத்தொரு சபையாமென - ஐம்பத்தொரு குழு வென்னும்படி. நீதி - முறை. ஐம்பத்தொரக்கரம் - வடமொழியில் உயிரும் மெய்யுமாயுள்ள ஐம்பத்தோரெழுத்துக்களும். வடமொழியிலுள்ள ஐம்பத் தோரக்கரங்களும் ஐம்பத்தொரு குழுவாக அவதரித்த வேதியர் என்று வேதியர்சிறப்புக் கூறியவாறு. மேலும், குருகூரில் ஆதிநாதப்பெருமான் அர்ச்சாரூபங்கொண்டெழுந்தருளியகாலத்து அவனொடுதோன்றி அவனுக்கு வழிவழி அடிமைசெய்துபோரும் தொன்மையும் உடையாரென்பதும் ஆம். சாதிவேதியர் - பழுதிலாவொழுகலாறுடைய வேதியர்.

459 அழகர்-அழகினையுடையார். அவரவர் கூடலழகரான திருமாலும் சோமசுந்தரரான சிவபெருமானும். கூடலிற் சுந்தரரிருவரோடு ஐம்பத்

தொருவர் சங்கமிருந்ததுபோல் குருகையில் வேதநூற்கழகத்திருந்து கலை பயின்று சிறந்தோர் என்றவாறு.

460 பழுமரம் - ஆலமரம். தொழுதி - கூட்டம். படர் கொம்பர் - பரவிய கிளை. விழுமிதாம் - சிறந்ததான. இரண்டில் - தாய்வழியும் தந்தை வழியுமான குலம். மறையெந்தை - திருமால். மறையெந்தைகுலத்துளார் - வைணவகுலத்திற் பிறந்தோர்.

461 கொற்றம் - வெற்றி. யானை - கசேந்திரன். யானைக்குதவிய கொள்கையான் - திருமால். யாய் - தாய். பேறு - பயன். திருமால் நான்கு வேதங்களையும் பயந்ததனால் பெயரளவில் அவற்றுக்குத் தாயாயிருக்க, இவர் அவற்றை வளர்த்துப் பயனடைந்தமையால் உற்றதாயாயினர் என்று உலகு புகழும் சிறப்புடையரென்றவாறு.

463 சந்தை - வேதமுதலியவற்றை ஓதுவோர், அவற்றைச் சிறிது சிறிதாய் ஆசிரியர் முற்கூற, ஆசிரியர்கூறிய அவற்றை இருமுறை அல்லது மும்முறை தொடர்ந்துகூறல். மாநதபூசை - மனத்தாற்செய்யும் பூசை. மறவி - மறதி. சந்துசெய்து - அவர் சொல்லிமுடித்த பகுதியையும் சொல்லத் தொடங்கவேண்டிய பகுதியையும் இணைத்து. மனைத்தத்தை - வீட்டுக்கிளி. தத்தை உணர்த்தும் என முடிக்க.

464 முன்றில் - இல்முன். தமிழ்வேதம் என்றது திருவாய்மொழி யாதிய திவ்யப்ரபந்தங்களை. வைகலும் - தினந்தோறும். மன்றல்முரசு, மாலைமுரசு மன்றல்வளை எனக் கூட்டுக. மன்றல்முரசு - மங்கலபேரிகை - மணமுரசு. வளை - சங்கு. வேதியர்முன்றிலெங்கும் வைகலும் வேதமும் தமிழ்வேதமும் மணமுரசும் மங்கலச்சங்கும் முழங்குவ என இயைக்க.

465 தயா - தயை. மற்றைநாள் - வேதமோதலும், (நக்கவர்பாற்) கேள்வியும், விருந்தோம்பலும், தண்ணளியும் நிகழாத நாள். வீழ்ந்த - பய னின்றியொழிந்த.

466 கருணை - பொறிக்கறி. போனகம் - சோறு. அற்பின் - அன்புடன். அதிதியர் - விருந்தினரை. நியமம் - முறைமை; நித்தியகருமமும் ஆம்.

467 இரதம் - தேர். ஐயிரண்டுதிசை - பத்துத்திக்கு. இரதம் ஐ யிரண்டுதிசையினும் செலப்போரியற்றிய ஏந்தல் - தயரதன். ஏந்தல் கண்மணி யாய் - புருஷசிரேஷ்டனான தயரதனுக்குக் கண்மணிபோற் சிறந்தவனாய். பரதன் மன்னுயிராம் பரன் - பரதனுக்கு அழியாத உயிராய்விளங்கும் பரம் பொருளான இராமன். அடிவிளக்கும் பவித்திரப்புனல் - திருவடிகளுக்கு

அபிஷேகஞ்செய்த பரிசுத்தமான தீர்த்தம் - ஸ்ரீபாததீர்த்தம். துளவு - திருத்துழாய். சரதம் - உண்மை. அருந்தி - உண்டு. உவவு - அமாவாசை பூரணைகள். விரதராஜன் -(விரதங்களுட் சிறந்ததாகிய) ஏகாதசி. மன்னராதியரும் - அரசர் முதலியோரும். வித்தகம் - ஞானம்.

468 தொந்தம் - பற்று. அது - பகுதிப்பொருள்விகுதி. இகந்து - விட்டு நீங்கி. தநு - உடல். வயிற்றிடையக்கினி - வயிற்றிலுள்ள ஜாடராக்கினி - பசி. சரித்தல் - சஞ்சரித்தல். காருகபத்தியம் - இல்லறம். தானம் - சற்பாத்திரனுக்கு மந்திரபூர்வகமாய் உதகத்துடன் கொடுப்பது.

469 பருதி - (சூரியன்போன்ற) சக்கரம். தரித்த - தாங்கிய. எழு - தூண், கணையமாமும் ஆம். உறழ் - ஒத்த. பரன் - பரம்பொருளான திருமால். சுருதி - வேதம். பொறித்தல் - எழுதல். மிருதி - ஸ்மிருதி. தாரணை - தரித்தல்.

470 சயம்பு - சுயம்பு - (பிறரால் தோற்றுவிக்கப்படாது) தானே தோன்றியது. தத்துவம் மூன்று - சித்து, அசித்து ஈசுவரங்கள். பொறித்த - எழுதிய. பொத்தகம் - புத்தகம். இயற்றமிழ் என்பது ஆழ்வார்களருளிய திவ்யப்ரபந்தங்களை. ஸ்ரீகோசம் - புத்தகம். ஸ்ரீ சிறப்புப்பற்றிவந்த அடை. புரந்தும் - கொடுத்தும். நிதியறை - கருவூலம். பராசரரும் வியாசரும் வடமொழியிலியற்றியவையும் சிதசிதீசுவர தத்துவங்களை விரிப்பனவுமான புராணங்கள் எழுதிய ஏடுகளையும் திவ்யப்ரபந்தங்களெழுதிய ஸ்ரீகோசங்களையும் பலர்க்கும் மேலோர் விரும்பும்படி கொடுத்தும் கணக்கின்றி வளர்கின்ற நூற்கருவூலமுடையார் என்றவாறு. இவர்க்கு நிதியறை புத்தகசாலையே யென்பது கருத்து.

471 உசிதம் - பொருத்தம். பருதி - பரிதி - சூரியன். துகில் - வஸ்திரம் - உத்தரியம் - மேலாடை. பருதிப்பொருபகை - சூரியனுடன் போர்செய்யும் பகைவராகிய மந்தேகரென்னும் அசுரர்.

472 கமலக்கடவுள் - பிரமன். உலகத்தார் தம்மொழுக்கத்தைப் பின்பற்றும்படி காயத்ரிக்கு முதல்வனான இறைவனைக் காலையில் பிரமனாகவும், நண்பகற்போதில் உருத்திரனாகவும் மாலையில் திருமாலாகவும் வழிபட்டுப் பின்னும் ஸர்வேசுவரனை (திருமாலை) வழிபடுவரென்றவாறு.

473 தா - கேடு. அந்தரத் திண் சிலை தழீஇ - ஆகாயமாகிய வலிய வில்லைப்பற்றி. வீவு - அழிவு. தனு - உடல். வெஞ்சுடரோன் பகை - சூரியன் பகை(வரான மந்தேகர்). ஒவு இல் - நீங்குதல் இல்லாத. அம்பு - 1. நீர். 2. வாளி. வேதியர் காலை நண்பகல் மாலைப்பொழுதுகளில் அநுஷ்டானஞ்செய்யுங்கால் இறைக்கும் அர்க்கியநீரால் கதிரவன்பகைவரான

மந்தேகர் மாய்ந்தமையால், அவ்வேதியர் ஆகாயமாகிய வில்லிலே பொருத்தி வீசிய அர்க்கியநீர் அம்பென்பது மெய்யாயிற்று என்றவாறு.

474 முன்பு பாதையோர் மூன்றெனத் தோன்றுநூல் என்றது முன்னுள் ஆசாரம் வியவகாரம் பிராயச்சித்தமாகிய மார்க்கம் மூன்றென்று சொல்லும்படி விளங்கிய வேதத்தை. அவர் இன்பமுற்று எத்த......... நாயிறு வதி(சி)ப்பது என இயைக்க. அவர் - அவ்வேதியர். நாயிறு - சூரியன். ஆல் அசை. மன்பதை - மக்கட்டொகுதி. மூன்றுவழியாயுள்ள வேதநூலால், வேதியர் இன்பமுற்றுத் துதித்தலால் சூரியன் (பகையாலழியாது) உளனுகி யிருத்தலால் அவ்வேதியர் மக்கட்டொகுதிக்குத் தெய்வமாவர் என்றவாறு.

475–478 இவைநான்கும் குளகம் (- ஒருவினைகொண்டுமுடிவன). இவற்றுள் வேதியர்க்குரிய சாதகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், விவாகம் முதலிய சடங்குகளும் அவை நிகழுமாறும், அவர் இல்லறத்திருந்து செய்யும் யாகங்களும் அவை நிகழுமாறும் சுருக்கிக் கூறப்பட்டுள்ளன.

475 தாயீன்றநாள் என்றதனுல் சாதகருமம் சொல்லப்பட்டது. ஐயிருநாள் என்றதனுல் நாமகரணம் சொல்லப்பட்டது. வடபுலம் - வடதிசை. சினை - கிளை. அரசின்சினை, வடபுலஞ்சார்சினை, துண்டச்சினையென இயைக்க. அதன்மேலாய சினையாகிய உத்தராரணியென்று அமை தாலுவினையும், அதன்கீழென்றேய அதராரணியினையும் வைத்து என்க. உத்தராரணி - அரணியின் மேற்பாகம் - (தீக்)கடைகோல். அதராரணி - அரணியின் கீழ்ப் பாகம். இதன்பின் மூன்றடிகளாலும் தீக்கடைந்தெடுக்கும் கருவியான அரணியியற்றற்காகும் மரமும், அதனை இயற்றுமாறும் கூறப்பட்டன. அரச விருக்ஷத்தில் வடதிசைநோக்கி வளர்ந்த கிளையைத் துண்டித்து அதன் அடிப் பாகத்தால் அரணியின் அடிப்பாகமும் அக்கிளையின் நுனிப்பாகத்தால் அரணியின்மேற்பாகமும் அமைத்துக்கொள்வது மரபு. தந்தைமார்கள் முதலில் தாயர்ஈன்ற நாளிலும் ஐயிருநாளிலும் அரணியினை வைத்துக் கடைந்து அதனுட் பிறந்த தழலாற் சடங்கமைத்து; எனப் பிற்செய்யுளோடு இயைந்து, மேலும் எச்சங்களோடு தொடர்ந்துமுடியும்.

476 சடங்கு - கிரியை. துயன் - த்விஜன் - இருபிறப்பாளன். பருவமும் - பொழுதினும். அதை நீடு ஆணித்தழலென்று விதியால் ஆங்கும் அமைத்து என இயைக்க. அதை - அவ்வரணியாற் கடைந்தெடுத்த அக்கினியை. நீடு ஆணித்தழலென்று - மிகப்பெருமைவாய்ந்த அக்கினியாகக்கருதி. ஆங்கும் - (முப்புரிநூல்புனைந்து துயனும்பருவமாகிய) அக்காலத்தும். கடிவேள்விக்கும் - விவாஹத்திற்கும். இல்லறத்தமைந்தோர்காணிற் களிப்ப விவாஹத்திற்கும் அதையே நீடு ஆணித்தழலென்று அமைத்தனராகி யென்க.

475–476 ஆகிய இவ்விரண்டு பாடலுள்ளும் தலைமைபற்றிக்கூறிய சாத கருமம் நாமகரணம் உபநயனம் விவாகமென்னுஞ் சடங்குகளுள், வேதியர்க்குரிய பதினறு சடங்குகளுள் ஒழிந்தனவும் அடங்கும். இவற்றால் இவையெல்லாம் அரணியிற் கடைந்தெடுத்த அக்கினியில் மந்திரமுறையால் ஓமபூர்வமாகச்செய்யப்படுவனவென்றவாறாயிற்று.

477 தனுவடிவம்-வில்வடிவம். சதுரச்சதுரம்-நாற்சதுரம். தொட்ட-தோண்டிய. குண்டம் - ஓமவேதி. சொரூபமூன்றும் தழல் - ஆகவநீயம், காருகபத்தியம், தக்கிணக்கினியென்று மூன்றுவடிவமான தழல். இவற்றுள் ஆகவநீயம் யாகசாலையில் நாற்சதுரவேதிகையில் தேவர்க்கு அவி வழங்கும் பொருட்டுக்காருகபத்தியத்துக்குவடக்கில் அமைக்கப்படுவது. காருகபத்தியம் வில்வடிவமான வேதிகையில் ஆகவநீயத்தின் தெற்கே அமைக்கப்படுவது; இருகஸ்தனால் நித்தியகர்மநிகழ்த்தற்குரியது. தக்கிணக்கினி - காருகபத்தியத்திற்குத் தெற்கே வட்டவடிவமான வேதிகையில், பிதிரர்களுக்குரிய ஓம முதலியன செய்வதற்கு அமைக்கப்படுவது. அக்நிஷ்டோமமுதல் மகாகிருது இறுதியாகவுள்ள யாகம் நூறும் வல்லார்வாய்க் கேட்டுணரத்தகும்.

478 பலாசு - புரசு. வில்லம் - வில்வம். அதவு - அத்தி. ஓமவிறகு - சமித்து. தந்திரம் - செயன்முறை. உலோபாமல் - தவறாமல். வீரீஇ - வீரிகி - ஒருவகை நெல். பூமன் - பிரமன். பாவகன் - அங்கியங்கடவுள். புரப்ப - கொடுக்கும்படி. புத்தேளிரையும் - தேவர்களையும்.

479 சிறப்பித்துரை ஆகுதி - இந்திரன் முதலிய தேவர்பெயர் குறித்து யாக ஓமகுண்டத்தில் வழங்கப்படும் அவியுணவு.

480 காதி - சினந்து. கடுங்கால் - கடிய காற்று - ஊழிக்காற்று. புனல் - நீர். பிரளயகாலவெள்ளம். காற்றுக்குரிய அடைமொழியைப் புனலொடுங்கூட்டிக் கடும்புனல் என்று கொள்க. கவ்வுதல் - வாய்க்கொள்ளல். படிறு - குற்றம். நீதிப்பரன் - நெறிபிறழாத திருமால். அந்நகர்க்கு - அந்தக் குருகாபுரிக்கு. அளித்த - அருளிய. நிலைபேறு - அழியாது நிலைத்திருக்குந் தன்மையை. அதற்கும் - அவ்வோமாக்கினிக்கும். சாதித்திருமந்திரம் - (மந்திரங்களுள்) உயர்ந்த ('மந்திராத்நம்' என்று வழங்கப்படுகிற) திருவெட்டெழுத்து. பயந்த - பெற்ற.

481 மகவு - குழந்தை. செகுத்தல் - அழித்தல். தான் - அசை. தாயர் - தாய். அடுகின் - கொன்றால். சலம் - மாறுபாடு, தணியாச்சினம். தாபித்தல் - நிலைபெறச்செய்தல். அங்குரிக்கும் - தோன்றும். தொடர்பின - சம்பந்தமுடையன.

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) | 0 | 4 | 0 |
| 2. | கணுநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் | | | |
| 4. | புலவராற்றுப்படை | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) | 0 | 4 | 0 |
| 14. | மூத்தொள்ளாயிரச்செய்யுட்கள் | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா | | | |
| 24. | குருமொழிவினாவிடை | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் | | | |
| 30. | ஞானமிர்தக்கட்டளை | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு | 0 | 8 | 0 |
| 34. | *அகப்பொருள்விளக்கம் | | | |
| 35. | *திருமந்திர நூறுபாட்டுக்குரை | | | |
| 36. | உவமானசங்கிரகம் | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | *மதங்கசூளாமணி ... ... ... | | | |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜநி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்“ செந்தமிழ் ”ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன்தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.